

அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி—புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**
உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதற்காகத்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது—உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது—ஆகவே வேர்க்குரு இல்லை, எரிச்சல் இல்லை, நமைச்சல் இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்குமேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேடமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது மூன்றுவிதமாகச் செயல்படுகிறது.


வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.


சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேட மருந்துக் கலவை கொண்டது.


சருமத்தை குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையோடும் வைத்துக் கொள்கிறது. அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM

# இரண்டாவதாய் வந்தார்! முதல் பரிசு பெற்றார்!

சோழவரம் இல்லுமுல்லு

இந்த ஆண்டும், சோழவரத்தில், வழக்கம் போல மோட்டார் சைக்கிள் மற்றும் கார் பந்தயங்கள் நடந்தன. அவற்றுள் ஒன்று 350 ஸிஸி வகை இந்திய மோட்டார் சைக்கிள்களுக்கான பந்தயம். இதில் இரண்டாவது வந்தார் மோட்டார் சைக்கிள் வீரர் சுபாஷ் சந்திர போஸ். (இவர் பல்வேறு பந்தயங்களிலும் பங்கேற்று, நூற்றுக்கணக்கில் வெற்றிகள் கண்டவர்) ஆனால் அவருக்கு முதல் பரிசு கிடைத்தது! எப்படி? அவரே சொல்கிறார்:

"பந்தயத்துக்குச் சில நாட்கள் முன்னால், நான் என் ஆபிஸுக்கு லீவு போட்டுவிட்டு, என்னுடைய மோட்டார் சைக்கிளைப் பந்தயத்துக்கு ரெடி பண்ணினேன். ஒவ்வொரு வருடமும், என் நெருங்கிய நண்பரான ராம்கோபால்தான் எனக்கு, வண்டியைப் பந்தயத்துக்குத் தயார் செய்வதில் உதவுவார். இந்த வருடமும் அப்படியே. வண்டியில் உள்ள இரண்டு சிலிண்டர்களில் ஏதோ கோளாறு. சரி செய்ய முயன்றோம். முடியவில்லை. ஒன்று நன்றாய் இருக்கவே, 'சரி, சமாளித்துக் கொள்ளலாம்' என்று விட்டுவிட்டோம். வண்டி ரெடி.

"பூரையல்ஸ் அன்றைக்குப் போனோம் சோழவரத்துக்கு. ஓட்டிப் பார்த்தோம். எனக்குத் திருப்தி. ஆனால் அப்போதே ஒரு பிரபல மது உற்பத்தி நிறுவனத்தின் சார்பில், பந்தயத்தில் கலந்து கொள்ள வந்திருந்த மோட்டார் சைக்கிள், எங்களுடையதிலிருந்து, சற்று வித்தியாசமாய் இருந்ததைக் கவனித்தேன். ஆனால் அதைப்பற்றி யாரிடமும், எதுவும் சொல்லவில்லை.

"பிப்ரவரி 10-ம் தேதி பந்தய தினம். சரியான நேரத்துக்குப் பந்தயம் துவங்கியது. வண்டிகள் புறப்பட்டன. முன்னால் சொன்ன மோட்டார் சைக்கிள் ஆரம்பத்திலிருந்தே லீடிங்கில் சென்று கொண்டிருந்தது. இரண்டாவது சுற்றில், என் வண்டியில், ரிப்பேராயிருந்த சிலிண்டரும் வேலை செய்ய ஆரம்பித்தது. எனக்கு சந்தோஷம் தாங்கவில்லை. வேகத்தை அதிகப்படுத்தினேன். முதல் நாலு சுற்றுகள் வரை நான் இரண்டாவது இடத்தில் சென்று கொண்டிருந்தேன். ஆனாலும் எனக்கும், முதல் மோட்டார் சைக்கிளுக்கும் இடையில் கொஞ்சம் அதிகம் இடைவெளி இருந்தது. நான் வேகமாய்ப் போய், அதைப் பிடிக்க முயற்சி செய்தேன்.

"அப்போது 28-ம் எண்ணுள்ள மோட்டார் சைக்கிள் என்னை ஓவர்டேக் செய்தது. இதனால் நான் கொஞ்சம் 'அப்செட்' ஆகிவிட்டேன். 'சரி! பந்தயத்தில் ஜெயிக்கப் போவதில்லை!' என்று தோன்றிவிட்டது.

"இன்னும் சில சுற்றுகளுக்குப் பின், என்னை ஓவர்டேக் செய்து கொண்டு போன 28-ம் எண் மோட்டார் சைக்கிள் 'ஸ்லிப்' ஆகிக் கீழேவிழ, நான் இரண்டாம் இடத்துக்கு வந்தேன். ஸ்பீடை அதிகரித்து, எவ்வளவோ முயன்றும், பந்தயத்தில் இரண்டாவதுதான் வர முடிந்தது.

"பந்தயம் முடிந்த போது பங்கேற்ற எல்லாருக்குமே, முதலில் வந்த பைக் பற்றிச் சந்தேகம். எந்த ஒரு இந்தியத் தயாரிப்பும், அத்தனை வேகமாய் — எடுத்த எடுப்பிலிருந்தே — போகாது. போதாக்குறைக்கு, பைக்கின் இருபக்கங்களும், பெரிய ஷீல்டால் மறைக்கப்பட்டிருந்தது. கூட பங்கேற்ற என் நண்பர் குருமீந்தர் சிங் இதைப்பற்றி என்னுடன் பேசினார். நான், "எனக்கும் இந்த வண்டி பற்றி சந்தேகம் உண்டு. ஆனாலும் பந்தயம் முடிந்து, முடிவுகள் அறிவிக்கப்பட்டபின், எதற்கு வீண் பிரச்சினை? பரவாயில்லை! விட்டு விடலாம்" என்றேன்.

"அதற்கு குருமீந்த், "இது தவறான முன்னோடியாகி விடக்கூடும். நீ பல ரேஸ்களில் ஜெயித்த சாம்பியன். உனக்கு இது ஒரு பெரிய விஷயமில்லை. அடுத்த வருடமே, ரேஸ் எல்லாம் போதும் என்று கூட நீ முடிவு செய்து ஒதுங்கிவிடலாம். ஆனால் எங்கள் விஷயம் அப்படி இல்லை. இரண்டாவதாய் வந்ததால், நீங்கள் தான் எதிர்ப்பைத் தெரிவிக்க வேண்டும்" என்று வற்புறுத்தினார்.

"இதுபோன்ற ஆட்சேபணைகளை முடிவுகள் அறிவித்த சில மணி நேரத்துக்குள் தெரிவிக்க வேண்டும். அதற்கு ரூ. 1500 கட்ட வேண்டும். என்னிடமோ அவ்வளவு பணமில்லை. குருமீந்தரும், மற்ற நண்பர்களும், தம்மிடம் இருந்த பணத்தைக் கொடுத்து, உதவினார்கள். நான் பணத்தைக் கட்டி, 'சாலஞ்ச்' செய்தேன்.

"பந்தயம் முடிந்த உடனேயே வண்டிகள் 'சீல்' வைக்கப்படுவது வழக்கம். எல்லா பைக்குகளும் பக்கத்திலிருந்த ஒரு தொழிற்சாலைக்கு எடுத்துக் கொண்டு போகப்பட்டன. அங்கே நடுவர்களால், வண்டிகள் பாகம் பாகமாய்ப் பிரிக்கப்பட்டு, பரிசோதிக்கப்பட்டன.

"இந்தப் பந்தயத்தில் முழுக்க முழுக்க இந்தியத் தயாரிப்பு வண்டிகளே பங்கேற்க வேண்டுமென்பது விதி. ஆனாலும் டயர், பிரேக் போன்ற ஒரு சில பாகங்கள் மட்டும் இறக்குமதி செய்யப்பட்டவற்றை உபயோகித்துக் கொள்ள அனுமதி உண்டு. பரிசோதனையில், முதலில் வந்த மோட்டார் சைக்கிள், ஜெர்மனிக்கு அனுப்பப்பட்டு, உள்ளே பாகங்கள் மாற்றப்பட்டு, இது தெரியாமல் இருக்க, இருபுறமும் ஷீல்டுகளால் மறைக்கப்பட்டு, போட்டியில் பங்கேற்றது என்று கண்டுபிடிக்கப்பட்டது.

"இல்லுமுல்லு நிரூபிக்கப்பட்டதன் விளைவாய் முதலில் வந்த பைக் போட்டியில் பங்கேற்கிற தகுதி இழந்து, இரண்டாவதாய் வந்த எனக்கு முதல் பரிசு கிடைத்தது."

சுங்கிராட்ஸ் சுபாஷ்!

சந்திப்பு : மௌஷ்மி




"சபாஷ், சுபாஷ்!"



"சென்ற ஆண்டு சாம்பியன், இந்த ஆண்டும் கூடத்தான்."

கல்கி

ஏப்ரல் 14ல





# மௌனப் புயல்

வாஸந்தி எழுதும்

திருமதி இந்திராகாந்தி படுகொலை செய்யப்பட்டதைத் தொடர்ந்து அஞ்ஞான வெறிகள் கட்டவிழ்த்து விடப்பட்ட அந்த மூன்று நாட்களை மையமாகக் கொண்டு உருவாகும் இலக்கியப் புயல் இது.

ஆரம்பம்


அகாலி தளம்
அனந்த்பூர் சாஹிப் தீர்மானம்
என்னது..
முருங்கை
மரத்தை விட்டு
கீழே இறங்
காது போலரு
க்குதே இது!


இந்த தடவை தீனி
கிடைக்காம
போயிடுமோ?
ஊராட்சி
தேர்தல்
நிச்சயம்
நடைபெறும்
ப.உ.ச

என் குத்து ஒண்ணு
பாக்கி! அதுக்குள்ளே
மயங்கி விழுந்துடாதே!
மத்யபட்ஜெட்
ரயில்வே பட்ஜெட்
தமிழ்நாடு பட்ஜெட்



கல்கி

1985 மார்ச் 31
மலர்: 43 இதழ்: 35
ரக்தாக்ஷிபங்குனி 18



# பட்ஜெட் பச்சடி

வேப்பம்பூ, மாங்காய், வெல்லம் மூன்றையும் ஒன்று கலந்து வருஷப் பிறப்பன்று காலை பெரியவர்கள் நம் உள்ளங்கையில் வைத்து, 'முகம் சுளிக்காமல் சாப்பிட வேண்டும்' என்று சொல்வார்கள். நாமும் வேண்டா வெறுப்பாக விழுங்கி வைப்போம். அப்படி ஒரு பட்ஜெட் சமர்ப்பித்திருக்கிறார் வி. பி. சிங்! நிதி அமைச்சர்தான் பட்ஜெட் தயாரிக்க வேண்டும் என்றாலும் இதனை 'ராஜீவின் முதல் பட்ஜெட்' என்றே கூறலாம். காரணம், தேர்தலின் போதும் அதற்கு முன்னும் பின்னும் 'தொழில்வளப் பெருக்கத்துக்கு உதவுபடியாகப் பொருளாதாரக் கொள்கை மாறும்' என்று அவர் உறுதி அளித்ததற்கு இந்த பட்ஜெட் செயல் வடிவம் தந்திருப்பதாகக் கருதப்படுவது தான்.

முதலில் இனிப்பு: கம்பல்ஸரி டெபாஸிட் என்ற கட்டாயக் கொள்முதலும் மரணவரி என்ற கொடுமையும் கம்பெனியின் விளம்பர, பயணச் செலவுகளைச் செலவினமாகவே ஏற்றுக் கொள்ளாமல் அதற்கும் வரி விதித்த மௌட்டியமும் அடியோடு ஒழிந்தன. சொத்துவரி, வருமான வரி, கம்பெனி வரி, முதலியவற்றில் கணிசமான சலுகைகள் தரப்பட்டுள்ளன. இவையெல்லாம் சேமிப்பு பெருகவும், முதலீடு அதிகரிக்கவும் தொழில்கள் வளர்ச்சி விஸ்தரிப்பு பெறவும் உதவி, வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்க வழி வகுக்கும். இதை விடவும் முக்கியமாக இனி வரி செலுத்தாமல் ஏய்க்க முகாந்திரமே யாருக்கும் இல்லை. வரி ஏய்ப்பவரை இனி தேச துரோகிகளாகவே கருதலாம். அனுதாபத்துக்கே இடமில்லை.

அடுத்து புளிப்பு: 3349 கோடி பற்றுக்குறை பட்ஜெட் தயாரித்த நிதி அமைச்சர், நடப்பு ஆண்டின் பற்றுக்குறையான 3985 கோடியை விடவும் இது குறைவுதானே என்று நியாயப்படுத்தப் பார்க்கிறார். அடுத்தடுத்து இரு ஆண்டுகளில் இப்படி வரவுக்குமேல் 7000 கோடிக்கு அதிகமாகச் செலவு செய்தால் அதன்பின் விளைவுகளை மக்கள் அனுபவித்தே தீர வேண்டும். விலைவாசிகள் விஷம் போல் ஏறும். அதிலும் பருவமழை பொய்த்து உணவு உற்பத்திச் சிறிதளவு பாதிக்கப்பட்டாலோ விலைவாசிகள் அதிபயங்கரமாய் உயரும்.

கசப்பு என்னவெனில் உடனடியாக உயர்கிற விலைகள். வரிச்சலுகைகள் பல அளிக்கப்பட்டிருப்பது போல் தோன்றினாலும் கூட்டிக் கழித்துப் பார்த்தால் 443 கோடி அதிகப்படி வருவாய் அரசுக்குக் கிடைக்குமளவில் புதிய வரிகள் விதித்துள்ளார் வி. பி. சிங் என்பது புரியும். இந்தப் புதிய வரிகளால் மிக அதிகமாகப் பாதிக்கப்படப் போவது நடுத்தர, அடித்தள மக்கள் தான். சோடா, சோப்பு, பாட்டரி ஸெல், டீஸல், கெரஸின், பெட்ரோல், சமையல் காஸ், காகிதம், சிமெண்ட், எஃகு போன்ற பலவற்றின்மேல் வரிகளை உயர்த்தி, சங்கிலித் தொடர்போல் வேறு பல அத்தியாவசியப் பொருள்களின் விலைகளும் அதிகரிக்க வழிவகுத்திருக்கிறார். சாமானியனின் குடும்ப பட்ஜெட் எகிறிப் போகும். போதாக்குறைக்கு ரயில் பயண, சரக்குக் கட்டண உயர்வு, இதற்கு மேலும் விலைவாசிகளை உயர்த்தும். ஒரே ஒரு ஆறுதல் டீ.வி. ரேடியோ லைசென்ஸ்களை ஒழித்ததுதான்.

ராஜீவின் பட்ஜெட் பச்சடியில் இனிப்பைவிடக் கசப்பும் புளிப்புமே தூக்கல்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.



**பல பெண்களை மோசடி செய்து கல்யாணம் செய்து கொண்ட ராகவன், சட்டப்படி தண்டனை பெற ஜனநாயக மாதர் சங்கம் முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறது. ராகவனுக்குத் தன் ஒரே பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்தவர் பத்மநாபன். தனக்குக் கௌரவக் குறைவு ஏற்பட்டாலும், சமுதாயத்தின் நன்மை கருதி மருமகனையே போலீஸில் பிடித்துக் கொடுத்த பத்மநாபன் அவர்களைச் சந்தித்த போது...**

வீட்டிலிருந்து ஆபீஸுக்குக் கிளம்பும் போது, போட்டுக் கொண்டிருக்கும் உடைகளும் பஸ் ஸ்டாண்டில் நின்று கொண்டிருந்த போது அவன் போட்டுக் கொண்டிருந்த உடைகளும் மாறுபட்டிருந்தன. எங்கே போய் உடைமாற்றிக் கொண்டு வந்தான் என்பது கேள்விக் குறியாக இருந்தது!

பிறகு என் நண்பர் ஒருவர் ராகவனுக்கு வேறு ஒரு பெண்ணுடன் கல்யாணம் நடந்திருப்பதாக என்னிடம் கூறினார். முதலில் இதை நாங்கள் நம்பவில்லை. பின்பு என் நண்பர் சொன்ன விலாசத்தில் சென்று பார்த்ததில் ராகவனுடைய அப்பா, தங்கை, அண்ணன் ஆகியோர் அங்கே வசிப்பது புரிந்தது. என்னைப் பார்த்தவுடன் அவர்கள் யாரும் என்னுடன் பேசவேயில்லை. மறுபடியும் சென்று பார்த்த போது அவர்கள் காலி செய்து கொண்டு போய்விட்டதாகச் சொன்னார்கள். என் வீட்டின் அருகிலேயே ராகவனுடைய தகப்பனார் குடியிருந்தும் இதுபற்றி ராகவன் என்னிடம் கூறவேயில்லை. காலி செய்து கொண்டு போனவர்கள் எங்கே போனார்கள் என்பதைத் தீர விசாரித்த போது, ஸ்ரீபெரும்புதூருக்குச் சென்றிருப்பதாக ஒரு தகவல் வந்தது. ஸ்ரீபெரும்புதூருக்குச் சென்று, தெருத் தெருவாக, வீடு வீடாக விசாரித்ததில், ராகவன் பேரம்பூரைச் சேர்ந்த ஒரு பெண்ணை மணந்து கொண்டு அங்கு குடித்தனம் பண்ணியதாகத் தகவல்கள் வந்தன.

ஆரம்பத்திலிருந்தே ராகவனுடைய பல நடவடிக்கைகள் சந்தேகத்துக்குரியதாக இருந்தன. திருமணத்தின் போது ஊர்வலம் வேண்டாம் என்றது நவீன நோக்கில் அல்ல, 'மக்கள் கண்ணில் தான் படவேண்டாம்' என்ற எண்ணத்தில்தான் என்பது பின்னர் புரிந்தது. பிறகு என் பெண்ணின் கூறைப்புடவையை வாங்கிக்கொண்டு போனான். "எதற்கு?" என்று கேட்டதற்கு "இஸ்திரி போட்டுக்கொண்டு வருகிறேன்" என்று சொன்னான். உண்மை என்னவென்றால் வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதற்கு அந்தப் புடவையைப் பயன்படுத்தியிருக்கிறான்.

பின்பு ஒருநாள், "திருப்பதிக்குக் கல்யாணத்துக்குச் சென்றுவருகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றான். திரும்பி வரும் போது திருமணங்களில் உபயோகப்படும் விரத தேங்காயையும், பெரிய லட்டு ஒன்றையும் கொண்டு வந்தான். எங்களுக்குத் திருப்பதி லட்டு என்றுகூறி அதைக் கொடுத்தான். ஆனால் அந்த லட்டைப் பார்த்த போது அது திருப்பதி லட்டு போலவே தெரியவில்லை. லாலா கடை லட்டு போல இருந்தது. இதைச் சொன்னவுடன் "உங்களுக்கு எப்போதும் சந்தேகம்தான்" என்று லட்டைப் பொடியாக்கிச் சாக்கடையில் கோபத்துடன் வீசிவிட்டான்.

இவனுடைய நடவடிக்கைகள் சந்தேகத்துக்கிடமாகிக் கொண்டு வந்ததைப் பார்த்த



அம்மாவால் ஆசையுடன் கொஞ்சப் படும் இக்குழந்தை யாரென்று உங்களால் அடையாளம் கண்டுபிடிக்க முடிகிறதா?

பார்க்க 60-ம் பக்கம்.

நான், வீட்டு வாசலில் ராகவன் (பி.டி.சி.) என்ற பெயர்ப் பலகையைத் தொங்கவிட்டேன். ஆனால் ஒவ்வொரு முறையும் அவன் வீட்டிற்குள் வரும் போது அந்தப் பெயர்ப் பலகையை மறைக்கும் விதமாக, அதன் மேல் சட்டையையோ அல்லது பையையோ மாட்டி விட்டு வருவான்.

நிறையப் பத்திரிகைகள் வாங்குவான். அட்டையில் "ராகவன், பி. ஏ., பி.டி.சி." என்று எழுதப்பட்டிருக்கும். இவன் வேறு கல்யாணம் செய்து கொண்டிருப்பதை அறிந்த நான், சோதனையாக அந்தப் பத்திரிகைகளில் என் பெண்ணின் பெயரையும் எங்காவது எழுதி வைப்பேன். அதே பத்திரிகை ராகவன் கல்யாணம் செய்துகொண்ட வேறு பெண்ணின் கண்ணில் படட்டும் என்ற எண்ணத்தில்தான்! ஆனால் அப்படி எழுதப்பட்ட பக்கத்தை ராகவன் கிழித்து விடுவான்.

என் பெண்ணை எப்போதாவது சினிமாவுக்குக் கூட்டிக் கொண்டு போகும்போது படம் ஆரம்பித்து இருட்டாக இருக்கும் போதுதான் உள்ளே போவான். வரும் போது என் பெண்ணைத் தனியே விட்டு விட்டு முன்னால் வந்துவிடுவான்.

இன்னொரு பெண்ணை அவன் கல்யாணம் செய்து கொண்டிருப்பதைத் தெளிவாகத் தெரிந்து கொண்ட பிறகு எனக்கு அவனைப் பார்க்கும் போது கோபம் கோபமாக வரும். ஆனால் என் உணர்ச்சிகளை அடக்கி வைத்துக் கொண்டு அவனை எப்படி போலீஸில் மாட்டி விடுவது என்று யோசித்துக் கொண்டே இருந்தேன். நான் ஏதாவது கேட்டால் "வெத்தலை தான் அழுகும்; பாக்கு அழுகாது' என்று என்னை மிரட்டுவான். அதாவது என் பெண் வெற்றிலையாக அழுகுவாளாம் அவன் பாக்காக நிலைப்பானாம்!

தொடர்ந்து பத்து நாட்கள் வராமல் போகவே, ராகவன் அப்பா வீட்டுக்குக் ஆள் அனுப்பி வந்த ஏஜென்ஸியிலும், பி.டி.சி. அடையாறு டிப்போவிலும் விசாரித்தேன். நான் விசாரித்தது அவனுக்குத் தெரிந்துவிட்டது. உடனே வீட்டிற்கு வந்து என்னை மிரட்டினான். நான் சொன்னேன், "கட்டின பெண்டாட்டியையும், குழந்தையையும் விட்டுவிட்டு இத்தனை நாள் வராமல் இருந்தால் விசாரிக்கத்தான் வேண்டியிருக்கும்" என்று. அவன் கோபம் மேலும் அதிகமாயிற்று. 'ராகவன் கேர் ஆப் ப்ளாட் பாரம்' என்று தலைப்பிட்டு என் தகப்பனுக்கு நீண்ட கடிதம் எழுதினான். அதில், ஊரில் எத்தனைப் பெரிய மனிதர்கள் உண்டோ அவ்வளவு பேர்களையும் தனக்குத் தெரியும் என்றார். ஆகவே தன்னிடத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்றும் எழுதியிருந்தான்.

கடைசியாக என் பெண்ணிடம் விஷயத்தைக் கூறினேன். ஆனால் அவள் நம்பவேயில்லை. இன்னொரு பெண்ணுடன் கல்யாணக் கோலத்தில் ராகவன் இருப்பதைப் புகைப்படத்தில் பார்த்தபின்தான் அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. முடிவாக இது பற்றிக் கேட்ட போது, குழந்தை தலையில் அடித்துச் சத்தியம் செய்து, "உனக்குத் துரோகம் செய்வேனா?" என்று என் பெண்ணிடம் கேட்டிருக்கிறான்.

எப்போது குழந்தைமேல் பொய் சத்தியம் அடிக்கும் அளவுக்கு விஷயம் சென்றுவிட்டதோ, இனி பொறுப்பதில் பயனில்லை என்று கருதி மைதிலி சிவராமன் அவர்கள் மூலமாக விஷயத்தைப் போலீஸுக்குச் சொல்லி ராகவனைக் கைது செய்ய ஏற்பாடு செய்தேன்.

பேட்டி : **ப்ரியன்.**
புகைப்படம் : **சுபா.**

"பையில் நான் ரேவதி போட்டோவை ஒட்டியிருந்ததைப் பார்த்ததும் மானேஜருக்கு ரொம்பக் கோபம். சர்ர்ர்னு அதைக் கிழிச்சுட்டு..."

"ரொம்பக் கோவிச்சுக்கிட்டாரா?"

"ஆமா, அப்புறம் அம்பிகா படத்தை அந்த இடத்தில் ஒட்டிட்டார்."

—கீழை. அ. கதிர்வேல்.



# பொங்கி எழும் பெண்கள்

'பல பெண்களைப் பணத்துக்காகவே மணந்து கைவிட்ட மோசடி ஆசாமி பற்றி இன்று எல்லோரும் பரபரப்பாகப் பேசி வருகிறார்கள். இந்தப் பிரச்னையில் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆதரவாகச் செயலாற்றிவரும் சங்கத்தைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்ளலாமே! ஜனநாயக மாதர் சங்கத் தலைவி திருமதி மைதிலி சிவராமனுடன் ஒரு பேட்டி...

**கேள்வி: ஜனநாயக மாதர் சங்கம் ஆரம்பிக்கப்பட்டு அகில இந்திய அளவில் வளர்ச்சி பெற்ற விவரங்களைக் கூறுங்கள்!**

பதில்: எங்கள் சங்கம் 1972–ஆம் ஆண்டு தமிழ்நாட்டில் ஆரம்பிக்கப்பட்டது. சுதந்திரப் போராட்டத்தில் பங்கு பெற்றவரும், முன்னாள் சட்டமன்ற உறுப்பினருமான 'கே. பி. ஜானகி அம்மாள்' அவர்கள் சங்கத்தின் மாநில அமைப்புத் தலைவி! செயலாளரான 'பாப்பா உமாநாத்' என்பவரும் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றவர். சென்னை மாவட்ட அமைப்பின் தலைவியாக நானும், செயலாளராக விஜயா ஜானகிராமன் என்பவரும், இணை செயலாளராக வழக்கறிஞர் சாந்தி என்பவரும் செயல்பட்டு வருகிறோம். எங்கள் சங்கம் 1981–ஆம் ஆண்டு இறுதியில் அகில இந்திய அளவில் விஸ்தரிக்கப்பட்டது. வட இந்திய மாநிலங்களில் 'ஜன்வாடி மஹிலசபா' என்றே அழைக்கப்படுகிறது.

**கேள்வி: சங்கத்தின் அங்கத்தினர்கள் பெரும்பாலும் சமுதாயத்தின் எந்தப் பிரிவினராய் இருக்கிறார்கள்?**

பதில்: சுமார் எழுபதாயிரம் உறுப்பினர்களைக் கொண்ட எங்கள் சங்கத்தில் பெரும்பாலோர் தொழிலாளர் மற்றும் விவசாயக் குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள்தான்! சென்னை போன்ற நகரங்களில் அலுவலகங்களில் வேலை பார்க்கும் பெண்கள் ஆர்வத்துடன் சேர்ந்து கொள்கின்றனர்.

**கேள்வி: இதுவரையில் நீங்கள் எந்த மாதிரியான பிரச்னைகளில் ஆர்வம் காட்டியிருக்கிறீர்கள்?**

பதில்: பெண்களின் பல பிரச்னைகளை முன்வைத்துப் போராடியிருக்கிறோம். சுகாதாரப் பிரச்னைகளான தண்ணீர்ப் பற்றாக்குறை, கழிப்பறை வசதியின்மை, விலைவாசி ஏற்றம் ஆகிய பிரச்னைகளை ஆராய்ந்து அவற்றிற்குத் தீர்வு காண முயன்றிருக்கிறோம். ரேஷன் கடைகள் முன்பு மறியல் நடத்தினோம். பல புதிய ரேஷன் கடைகளை அமைப்பதில் வெற்றியும் பெற்றிருக்கிறோம்.

**கேள்வி: நீங்கள் குறிப்பிடும் பிரச்னைகள் சமுதாயத்தில் ஆண், பெண் இருபாலரையும் பாதிக்கின்ற பொதுப்பிரச்னையே தவிர பெண்கள் பிரச்னை இல்லையே?**

பதில்: பெண்களின் தனிப்பட்ட பிரச்னை என்று சொல்ல முடியாவிட்டாலும் அதிகமாக இவை பெண்களைத்தானே பாதிக்கின்றன! வீட்டிற்குத் தேவையான தண்ணீர் பெறுவதும், கணவனின் சம்பளத்திற்குள் விலைவாசிகளுக்கு ஈடுகொடுத்துச் செலவு செய்வதும் பெண்களின் வேலைதானே! உங்களுக்குத் தெரியுமா, எத்தனை ஏழைப் பெண்கள் கழிப்பறை வசதி கூட இல்லாமல் தவிக்கிறார்கள் என்று? இதுபோன்ற அடிப்படை சுகாதார வசதிகளுக்கு முக்கியத்துவம் தருவதை எங்கள் கடமையாகக் கருதுகிறோம்.

**கேள்வி: சமுதாயத்தில் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கு எதிராக சங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளைப் பற்றி கொஞ்சம் சொல்லுங்களேன்?**

பதில்: வரதட்சிணை காரணமாக உயிரோடு அவளை எரித்துவிடும் கொடுமையை ஒழிப்பதில் மிகுந்த அக்கறை காட்டி வருகிறோம். படித்தவர்கள் நிறைந்த குடும்பத்தில் கூட இதுபோன்ற சம்பவங்கள் நடக்கின்றன. ஆஸ்பத்திரிகளில் தீக்காயங்களுடன் சந்தேகத்திற்கு இடமுள்ள வகையில் இறக்கும் இளம் பெண்களைப் பற்றிய விவரம் எங்களுக்குக் கிடைத்தவுடன் அங்கத்தினர்கள் மூலம் நாங்களாகவே அக்கம்பக்கத்தில் விசாரித்துத் தகுந்த சாட்சியங்களுடன் போலீஸில் புகார் செய்வோம். 1982–ல் திருப்பூரில் கல்லூரி விரிவுரையாளராக வேலைபார்த்து வந்த நாகம்மா என்பவர் கருகி இறந்த போது அவரது கணவரின் வாக்கு மூலத்தை வைத்துக் கொண்டு தற்கொலை என்றே போலீஸார் தீர்மானித்து விட்டனர். ஆனால் நாங்கள் சந்தேகப்பட்டு விசாரித்ததில் அது ஒரு திட்டமிடப்பட்ட கொலை என்று தெரிய வந்தது. சாட்சியங்களுடன் உறுதி செய்த பிறகு அவர் கணவர் முனியப்பன் கைது செய்யப்பட்டார். இப்படிப் பல உதாரணங்கள் கூற முடியும்.



மைதிலி சிவராமன்.



பெண்கள் போராட்டம்.

**கேள்வி: வரதட்சிணையை ஒழிக்கும் முயற்சியாக உங்கள் சங்கம் நடவடிக்கை மேற்கொண்டதுண்டா?**

பதில்: வரதட்சிணைச் சட்டத்தில் மாற்றங்களைக் கொண்டுவர ஒரு லட்சம் கையெழுத்துக்களைத் திரட்டி — பாராளுமன்றத்துக்கு அனுப்பி வைத்தோம். வரதட்சிணைக்கு எதிராகப் பல இயக்கங்களையும் கண்டனக் கூட்டங்களையும் நடத்திக்கொண்டுதான் இருக்கிறோம். சென்ற ஆண்டு தமிழக முதல்வரைச் சந்தித்தேன். இதுசம்பந்தமாக விவாதித்த போது அவர் "வரதட்சிணை தரமாட்டோம் என்று பெண்கள் ஒவ்வொருவரும் உறுதி எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று ஆலோசனை கூறினார். ''அப்படி உறுதி மொழி எடுத்துக்கொள்ளும் பெண்களுக்கு வேலை வாய்ப்புக்கு அரசாங்கம் உத்தரவாதம் அளிக்குமா?'' என்று கேட்டதற்கு அவர் மௌனமாகி விட்டார். ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு செய்து கொள்ளும் கல்யாணங்கள் மூலம்தான் இந்தப் பிரச்னையை ஓரளவு குறைக்க முடியும் என்பது என் கருத்து.

**கேள்வி: பெண்களுக்கு இழைக்கப்படும் பல அநீதிகளுக்கு முக்கிய காரணமாக நீங்கள் எதைக் கருதுகிறீர்கள்?**

பதில்: பெண்களின் தாழ்ந்த அந்தஸ்தே முக்கியக் காரணம்! ஆண்பிள்ளைகளுக்குப் படிப்பையும், உத்தியோகத்தையும் அத்தியாவசியமான விஷயங்களாகச் சொல்லி வளர்க்கிறோம். ஆனால் பெண்களை ஓரளவு படிக்க வைத்து எவன் கையிலாவது பிடித்துக் கொடுத்துத் தங்கள் கடமையை முடித்துவிட பெற்றோர்கள் அவசரப்படுகிறார்கள். பெண்கள் இன்னமும் கூட இரண்டாம் தர நிலையில்தான் இருக்கிறார்கள். எதற்கும் ஆண்களையே சார்ந்து நிற்கும் ஒரு பலவீனத்தில் இருந்து அவர்கள் மீளவே இல்லை. அந்தப் பலவீனத்தினால் தான் பெண்களை மிக இழிவாகக் கருதி ஆண்கள் எளிதில் ஏமாற்றி விடுகிறார்கள். தன்னம்பிக்கையுடனும், சம்பாதிக்கும் தகுதியுடனும் பெண்கள் விளங்கும் போதுதான் அவர்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளும் குறையும். இந்த விஷயத்தில் பெண்களைத் தயார்ப்படுத்தும் பெரும்பொறுப்பு பெற்றோர்களுக்குஉண்டு.

**கேள்வி: நம் சமுதாயத்தில் பல பிரச்னைகளினால் பாதிக்கப்படுபவர்கள் வெளிப்படையாக முன்வந்து நடவடிக்கை எடுக்காமல் மூடி மறைத்து 'நம் தலைவிதி அவ்வளவுதான்' என்று இருந்துவிடுகிறார்கள். இந்த நிலையில் சமுதாயச் சீர்திருத்தம் என்பது மிகவும் சிக்கலானதாக ஆகிவிடுகிறது அல்லவா?**

பதில்: நீங்கள் சொல்வது சரிதான். விஷயம் செய்தித்தாளில் வந்துவிட்டால், குடும்ப கௌரவம் பாழாகிவிடும் என்ற நினைப்பும், பாதிக்கப்பட்ட பெண்ணின் சகோதரிகளின் எதிர்காலத்தைப் பற்றிய தேவையற்ற பயமும், பிரச்னையை வெளிப்படையாக்கி சமூக விரோதிகளை அடையாளம் காட்டும் துணிச்சலைக் குறைத்துவிடுகின்றன. சமூக விரோதிகளைக் காட்டிக் கொடுக்கத் தயக்கம் காட்டக் கூடாது. பாதிக்கப்பட்டவர்கள் துணிச்சலுடன் முன் வருவது தான் சமூகம் சீர் திருந்தவும் வேறு பலர் பாதிப்புக்கு உள்ளாகாமல் தப்பவும் வழி வகுக்கும்.

பேட்டி: பாரதி.
புகைப்படங்கள்: சுபா.

# என்னை அரெஸ்ட் பண்ணுங்க...

பெரியசாமிக்கு இன்றுதான் விடுதலை.

ஆறு மாதம் நிராகரிக்கப்பட்ட சுதந்திரக் காற்று அவன் நாசிகளில் புகுந்து நுரையீரல்களை நிரப்பியது. உயரமான கதவுகளைத் தாண்டி வெளியே வந்ததும் கண்களைச் சுற்றிலும் சுழலவிட்டு, தன்னை வரவேற்க ஆள் வந்திருக்கிறதா என்று பார்த்தான்.

யாருமில்லை. சற்று ஏமாற்றமாய் இருந்தது. நல்லதம்பி கட்டாயம் வந்திருப்பான் என்று எதிர்பார்த்திருந்தான். வழக்கமாய் பெரியசாமி விடுதலையாகிற நாட்களில் அவன் வந்து அண்ணனை எதிர்கொள்ளாமல் இருந்ததில்லை. பத்து வருடங்களுக்கு முன்பு ஒரு முறை நடந்த நிகழ்ச்சி பெரியசாமிக்கு இப்போது நினைவில் வந்தது.

கச்சேரி ரோடு போலீஸ் ஸ்டேஷன். பெரியசாமிக்குப் பத்து நாள் கட்டாய ஓய்வு, கம்பிகளுக்குப் பின்னால். மழிக்காத முகத்துடன் ரிஜிஸ்தரில் கையெழுத்தைப் பதித்து விட்டு அவன் வெளியே வந்து நிமிர்ந்தான். பதறிப் போனான்.

போக்குவரத்திலிருந்து ஒதுங்கி அந்த ரிக்ஷா நின்றிருந்தது. ரிக்ஷாக்காரன் தலையில் துண்டை மடித்துக் கட்டியிருந்தான். வாயில் ஒரு பீடியின் கடைசி மூச்சு. பின் இருக்கையில் கருப்புப் போர்வைக்குள் சுருட்டிக் கொண்டு ஒரு உருவம். முகம் மட்டும் பாதி தெரிந்தது. விழிகள் சிவந்து பெரியசாமியை நோக்கின. அதில் உடனடியான நட்பும், சிரிப்பும் சேர்ந்தன.

நல்லதம்பி!

பெரியசாமி பதைபதைப்புடன் நெருங்கினான். போர்வையை விலக்கினான்.

'என்னடா தம்பி?' குரல் நடுங்கியது.

'நாலு நாளா குளிர் ஜுரம் உன் தம்பிக்கு. தர்மாஸ்பத்திரில பாட்டில்ல மருந்து கொடுத்தாங்க. அதைத் தான் குடிச்சிகிட்டிருக்கான். இன்னும் சரியாப் போகலே...' என்று ரிக்ஷாக்காரனிடமிருந்து குரல் வந்தது.

பெரியசாமியின் கண்களில் தானாய் நீர் சேர்ந்தது. 'ஏன்டா தம்பி.. ஜுரத்தோட யாச்சும் வந்து என்னைப் பாக்கணுமா, ம்? நானே பத்து நிமிஷத்திலே வூட்டுக்கு வந்து பாக்க மாட்டேன்?'

நல்லதம்பி அண்ணனின் கைகளைப் பற்றிக் கொண்டான்.

'பத்து நாளா உன்னைப் பாக்காம இருந்தே எனக்குத் தாங்கலே.. நீ யாருக்கோசரம் ஜெயிலுக்குப் போகறே? எனக்கோசரம் தானே? ஜுரம் வந்தா என்ன — மருந்து சாப்டா சரியாப் போயிடுது. அதுக்காக உன்னைப் பாக்க வராம இருக்கச் சொல்றியே' பதினாலு வயது அப்போது, நல்லதம்பிக்கு.

நல்ல தம்பி — பெயருக்குத் தகுந்த மாதிரி தனக்கு 'நல்ல' தம்பி என்று அன்றைக்கு எத்தனை பெருமையும் நெகிழ்வுமாய் இருந்தது! மீசை முளைக்கிறவரை தானே அந்தப் பாசமும், பற்றுதலும் என்று அன்றைக்கு எண்ணினான். நல்லதம்பி அவ்வளவு சீக்கிரம் மாறிப் போகவில்லை.

பெரியசாமிக்கு ஜெயிலுக்குப் போவது எப்படி பழக்கமாகிப் போனதோ அதே மாதிரி நல்லதம்பியை விடுதலை நாளில் எதிர்பார்ப்பதும் பழக்கமாகிப் போனது.

அப்பாவும், அம்மாவும் ஆற்றோடு ஒழிந்து போன பின்னால், கிராமத்தில் இருப்புக் கொள்ளாமல் பெரியசாமி சென்னைக்கு ரயிலேறிய போது அவனுக்குப் பதினேழு வயது. ஸ்லேட்டும், சாக்பீஸும், கிழிந்த துணிப் பையுமாய் அவன் கையைப் பற்றிக் கொண்டு பத்து வயதில் நல்லதம்பி. சென்னையின் பரந்த அழுக்குத் தெருக்களில் இருபது நாட்களுக்கு மேல் பசித்த வயிறுகளுடன் இரை தேடி அலைந்த அந்த அனுபவங்கள் சுலபத்தில் மறப்பவை அல்ல. அப்புறம் ஒரு சினிமா ஸ்டுடியோவில் எடுபிடி உத்தியோகம் கிடைத்து நாயலைச்சல்.

அந்த நேரத்தில்தான் குருமூர்த்தியுடன் பழக்கமேற்பட்டது.

'டேய் ஒம்பேரு என்னடா?'

'பெரியசாமிங்க'

'அது உன் தம்பியா?'

'ஆமாங்க'

'இஸ்கூல் போறானா?'

'ஆசைதாங்க, எனக்கும். வசதி பத்தாதுங்க.'

'வசதி வந்தா, அவனைப் படிக்க வப்பியா?'

'வப்பேங்க'

'அப்ப என்னோட வா. சுலபமா சம்பாதிக்க ஒரு வழி பண்ணித் தரேன்'




அந்த 'சுலபமாய' சம்பாதிக்கும் வழி என்ன என்று அறிந்த போது முதலில் அதிர்ச்சியாய் இருந்தது. கள்ளச் சாராயம், செயினை அறுத்தல், ரயிலில் பிக்பாக்கெட் என்று எத்தனையோ வழிகளில் செயல் படுகிற சிலருக்கு ஜெயிலில் 'டூப்' போட வேண்டும். இலாக்கா நிர்ப்பந்தத்திற்கு பயந்து போலீஸ் சில கேஸ்களை ஜோடிக்கும் நேரத்தில் குற்றவாளிகளை முதுகுக்குப் பின்னால் ஒளித்து 'நான்தான் அந்த பர்ஸை எடுத்தேன்' என்று வாக்கு மூலம் கொடுக்க வேண்டும். சில கெடுபிடிகளை உத்தேசித்து 'அந்தப் பெண்ணை விற்க முயன்றது, வேறு யாருமில்லை, இந்தப் பெரியசாமி தான்' என்று ஒப்புதல் கொடுக்க வேண்டும்.

போலீஸ் தடிகள் முதுகைப் பதம் பார்க்கும். முட்டிச் சில்லைப் பெயர்க்கும். கோர்ட்டில் கொண்டு நிறுத்தும். மூன்று மாதம், ஆறு மாதம் என்று கண்ணாடி போட்ட நீதிபதி தூங்கிக் கொண்டே தீர்ப்பு வாசிப்பார். கம்பிகளுக்குப் பின்னால் நெட்டித் தள்ளுவார்கள். உளியைக் கொடுத்துக் கல்லுடைக்கச் சொல்வார்கள். பேசாமல் செய்ய வேண்டும்.

அவ்வளவுதான் வேலை. இதற்கு ஆச்சரியமான கூலி. நல்லதம்பிக்கு வேளா வேளைக்கு சாப்பாடு, ஸ்கூலில் படிப்பு. கையில் வசதியான பணம். சந்தோஷமாய் ஒப்புக் கொண்டான் பெரியசாமி.

நல்லதம்பிக்கு விவரம் புரிந்ததும் தடுமாறிப் போனான். 'வேண்டாண்ணே, பத்தோ, இருபதோ, நாம கூலிக்கு சுமந்தாச்சும் சாப்பிடுவோம். நீ ஜெயில்லே போய்க் கஷ்டப்படறது நல்லால்லே...' என்று கண்களில் நீரைக் குவித்தான்.

'என்னைப் பத்தி கவலைப்படாதே, தம்பி. நீ பெரிய படிப்பு படிச்சு முன்னுக்கு வா. அது போதும்.'

பெரியசாமியின் பொழுதுகளில் பாதி கம்பிகளுக்குப் பின்னால் கழிந்தது. ஆனால் ஒரு முறை கூட அவன் 'இல்லை' என்று நீதிபதிகளிடம் வாதம் புரியவில்லை. குற்றங்களை ஏற்றுக் கொண்டு குடிசை ஒன்று சம்பாதித்தான். நல்லதம்பிக்கு ஸ்கூலோடு படிப்பு நின்று போனது. அப்புறம் இன்னும் கொஞ்சம் புரட்டியதில் கணிசமாய்ப் பணம் சேர்த்து ஒரு பெட்டிக் கடை வாங்க முடிந்




தது. சிகரெட்டும், குளிர்பானமும், வாழைப் பழமும், லாட்டரிச் சீட்டும் என்று வியா பாரம் விஸ்தீரணம் கண்டது.

பெரியசாமிக்கு இப்போது அந்தஸ்து வந்து விட்டது. பெண் கொடுக்க வீட்டைத் தேடிக் கொண்டு ஆள் வந்தது. கோமதியை அவனுக்குப் பிடித்திருந்தது.

'அண்ணே, இவங்க தான் எனக்கு அண்ணியரா வரணும். பாத்தாலே எவ்வளவு களையா இருக்காங்க!'

நல்லதம்பி சிபாரிசு பண்ணியதும் அவளைத்தான் என்ற போது பெரியசாமி இரண்டாவது யோசனையில்லாமல் அவள் கழுத்தில் முடிச்சிட்டான். கல்யாணம் என்றாகி, அவள் வயிற்றில் குழந்தை என்றான போது, அவளது வார்த்தைகளில் அர்த்த மிருப்பதாய்த் தோன்றியது.

'இப்பத்தான் ஒரு நிலைமைக்கு வந்தாச்சே.. இனிமே எங்க இந்த நாய்ப் பொழைப்பு? பேசாம கடையில தம்பி கூட உக்காந்து நாலு காசு சம்பாரிக்கலாங்க.. ஜெயிலு, போலீஸ்னு இனி நீங்க போகக் கூடாது.' கோமதியின் மஞ்சள் பூசிய முகத்தையும், நெற்றியின் பெரிதான குங்குமப் பொட்டையும் பார்க்கும் போது அந்த வார்த்தைகளைத் தட்டப் பிடிக்கவில்லை.

'சரி புள்ளே, இனிமே அந்த வம்புக்கு நான் போகலே...' என்று எண்ணெய் காணாத அவள் கூந்தலில் அடித்துச் சத்தியம் செய்தான்,

வம்புக்கு அவன் போகாவிட்டால், வம்பு அவனைத் தேடி வந்தது.

ஏதோ அரசியல் கூட்டத்தில் கல்லெறி. கலாட்டா. அங்கே ஆளைப் பிடிக்காமல் கோட்டை விட்ட போலீஸ் அவன் வீட்டுக் கதவைத் தட்டியது.

அவன் கதறக் கதற அவனை ஜீப்பில் ஏற்றியது. முதன் முறையாய் 'இல்லே' என்று நீதிபதியிடம் வாதாடினான். தண்டனைக் காலம் நான்கிலிருந்து ஆறு மாதம் என்று உயர்த்தப்பட்டதுதான் மிச்சம்.

இதோ இன்றைக்கு விடுதலை.

பெரியசாமியை வெளியே விட்டாயிற்று. ஆனால் அவன் நகராமல் ஜெயில் வாசலிலேயே தயங்கித் தயங்கி நின்றுக் கொண்டிருந்தான்.

* * * * * *

''என்னப்பா, பெரியசாமி, இங்கியே நிக்கறே? வூட்டுக்குப் போக இஷ்டமில்லியா, இல்லே வழி மறந்து போச்சா?''

கம்பீரமான குரல் வந்தது. சப்—இன்ஸ்பெக்டர் ராஜதுரை அவன் தோளில் தடியால் தட்டிக் கொடுத்துக் கேட்டார்.

''என் தம்பி வருவானுங்க, வழக்கமா''.

''நீ பெரிய்ய அரசியல் தலைவரு... ஜெயில் வாசல்ல மாலை போட்டு மரியாதை பண்றதுக்கு... சரிதான் நடப்பியா...''

அவருடைய குரலின் எள்ளல் மனத்தில் உறைத்தது. போலீஸிடம் அவன் ஜாதகமே சிக்கியிருக்கலாம். ஆனால், அவன் மற்றவர்களைப் போல குற்றம் செய்து நியாயமாய் கம்பிகளுக்குப் பின்னால் போனவனில்லை.

அவனுடைய ஜெயில் வாசம் ஒரு தண்டனையில்லே. அவனுடைய தொழிலே அது தான். அவனுடைய சம்பாத்தியமே அது தான் என்று இந்த இன்ஸ்பெக்டருக்குப் புரிந்திருக்கவா போகிறது என்று நினைத்துக் கொண்டான்.

திடீரென்று ஒரு கவலையும் வந்தது. ஒருவேளை நல்லதம்பிக்கு உடம்பு சரியில்லாமல் போய்... அப்படித்தான் இருக்க வேண்டும். அந்த எண்ணம் வந்தவுடன் இத்தனை நேரத்தை வீணடித்ததை நொந்து கொண்டு, பெரியசாமி ஒரே பாய்ச்சலாகக் கிளம்பினான்.

* * * * *

குடிசை வாசலில் பூட்டு தொங்கியது. ஆச்சரியமாய் இருந்தது. கோமதி எங்கே போய் விட்டாள்?

நம்பிக்கையில்லாமல் அவன் பூட்டை இழுத்துப் பார்த்துக் கொண்டிருந்த போது, "யாரு, பெரியசாமியா?" என்று குரல் வந்தது.

திரும்பிப் பார்த்தான்.

எதிர்க் குடிசை வாசலில் மரகதம் நின்றிருந்தாள். கைக் குழந்தை புடவைத் தலைப்பிற்குள் முகம் புதைத்திருந்தது.

"வூட்டுலே யாருமில்லேயே, என்னாத்துக்கு பூட்டை இழுத்து இழுத்துப் பாக்கிறே?"

"கோமதி எங்கே போயிருக்கு?" என்று கேட்டான் பெரியசாமி.

"அவங்கப்பன் வீட்டுக்கே போயிரிச்சி."

"அப்பன் வீட்டுக்கா? என்னாத்துக்கு?"

"ஹா... ம்... அந்தக் கண்றாவியை நீயே போய்க் கேட்டுக்க..."

சட்டென்று மரகதம் குடிசைக்குள் மறைந்து விட்டாள்.

பெரியசாமி குழப்பம் தாக்கின கால்களை விரைந்துப் போட்டு பக்கத்துத் தெருவுக்கு ஓடினான்.

* * * * *

"வாய்யா" — கோமதி நீட்டி முழக்கினாள். வயிறு நன்றாய் மேடிட்டிருந்தது. முகத்தில் வெறுப்பு கூடியிருந்தது. பேசகையில் மூச்சிரைத்தது.

"என்னை அம்போல்னு வுட்டுட்டு நீ ஜெயிலுக்கு போயிரு... நான் சோத்துக்கும் இன்னொண்ணுக்கும் உன் தம்பி கால்லே போய் விழுறேன்."

"என்ன கோமதி? என்னாச்சு, நல்லதம்பிக் கிட்டேதானே உன்னை வுட்டுட்டுப் போனேன்?"

"நல்ல—தம்பி உனக்கு. அண்ணி கொஞ்சம் அழகாயிருந்திட்டா, அவளையே வந்து ஆள நினைக்கிற தம்பிய்யா, உன் தம்பி."

"கோமதி!"

"ஏன்யா கத்தறே? சாராயம் குடிச்சிட்டு வந்து அவன் என்ன என்ன கேள்வியெல்லாம் கேக்குறான்யா? நம்ப ரோடு பூரா நாறிப் போச்சு அவன் விவகாரம். தனியா மாட்டிக்கினேன் ஒருநாள். சினிமாக்காரன் மாதிரி மேலே பாய்ஞ்சு புடவை, ரவிக்கையெல்லாம் கிழிச்சுட்டான் பாவி. மறுநாள் அரிசி வாங்கத் துட்டு கேட்டேன் கடையாண்டை போய். இன்னைக்கு ராத்திரி வர்றதா இருந்தா நாளைக்குத் துட்டு தரேன்னான் பொறுக்கிமவன். தூத்தெறின்னு மூஞ்சிலேயே துப்பிட்டு வந்திட்டேன். நாலு வூட்லே பாத்திரம் தேய்ச்சா துட்டு வருது. அந்த வூட்டுக்கு இன்னொரு வாட்டி நான் வருமாட்டேன்யா... நீ போ..."

பெரியசாமியின் கண்களில் அக்னி புகுந்தது.

சட்டென்று திரும்பி நடந்தான்.

* * * * *

"கோமதி சொன்னதெல்லாம் நிஜமாடா?"

பெரியசாமியின் கோபம் தலைகளைத் திரும்பி பார்க்க வைத்தது.

நல்லதம்பி கடையிலிருந்து கொண்டு அண்ணனைப் பார்த்தான். பார்வையில் பயம் இல்லை. ஒரு எகத்தாளம் இருந்தது.

"சொல்லுடா நாயே."

நல்லதம்பி உதறிக் கொண்டான். "என்னடா மிரட்டறே? நீ ஜெயிலுக்குள்ள போயிட்டா யாரு பாத்துப் பாங்க உன் பெண்டாட்டியை? நான் கேட்டது மட்டும் தப்பாயிடுச்சாக்கும்?"

பெரியசாமிக்கு அதற்கு மேல் நிதானமில்லை. சட்டென்று இடுப்பிலிருந்து அரிவாளை உருவினான்.

* * * * *

போலீஸ் ஜீப் வந்து டயர் தேய நின்றது. கூடியிருந்த தலைகள் விலகி அவசரமாய் வழி விட்டன. பெரியசாமி ரத்தம் சொட்டுகிற அரிவாளை வேட்டியில் துடைத்தான். காக்கி உடுப்புகளைப் பார்த்து நிதானமாய் நிமிர்ந்தான். இரண்டு கைகளையும் முன் நீட்டினான். குரல் பிசிறில்லாமல் வந்தது.

"அரெஸ்ட் பண்ணுங்க இன்ஸ்பெக்டர். இன்னிக்குத் தான் மொதல் தடவையா நான் செஞ்ச குற்றத்திற்காக ஜெயிலுக்குப் போறேன். அரெஸ்ட் பண்ணுங்க.

"என்னங்க இது ஜானவாச ஊர்வலத்துக்கு மாப்பிள்ளை யானையில் வர்றார்?"

"நான்தான் முன்பே சொன்னேனே மாப்பிள்ளை காட்டிலாகாவில் வேலை பார்க்கிறார்னு."

—கீழை. அ. கதிர்வேல்.



## இலவசம்

பளபளக்கும் ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் கிண்ணம்

புதிய

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

இரண்டு டின்கள் வாங்கும்போது

புதிய ஃபாரெக்ஸ் அதிக சுவையானது
புதிய ஃபாரெக்ஸ் அதிக முழுமையானது

நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.




இவ்வாய்ப்பு தேர்ந்தெடுத்த சில ஊர்களில் மட்டும் விசேஷ டின்களின்மீது ஸ்டாக் உள்ளவரை வழங்கப்படும்.

உடல் நலத்தின் உறைவிடம்—க்ளாக்ஸோ

CLARION/B/GX/5/203 TML

# என் பாட்டில் என்ன பிழை கண்டீர்?



கவிஞர் இன்குலாப்.

**சென்னைப் பல்கலைக்கழகத்தின் எம்.ஏ. வகுப்புக்குத் தமிழ்த் துணை நூலாக வைக்கப்பட்டு உள்ள பாடப் புத்தகத்தில் மன்னன் ராஜராஜன் பற்றி கவிஞர் இன்குலாப் எழுதிய கவிதை வெளியாகி இருக்கிறது. இந்த கவிதை பற்றி சட்ட மேலவையில் கவிஞர் முத்துலிங்கம் கூறிய குற்றச்சாட்டுக்களுக்குப் பதிலளிக்கிறார் இன்குலாப்...**

"நான் எழுதிய அந்தக் கவிதை எந்தச் சூழ்நிலையில் எழுதப்பட்டது என்பது எனது நண்பர் முத்துலிங்கத்துக்குத் தெரியாது. 1972 காலகட்டத்தில் தஞ்சையில் ராஜராஜன் சிலைத் திறப்புவிழாவின் போது, "கோவிலின் உள்ளே அந்த சிலை வைக்க மத்திய அரசு அனுமதி அளிக்க மறுத்துவிட்டது" என்று அதை ஒரு பிரச்னையாக மக்கள் முன் வைத்தார் அன்றைய முதல்வர். ஆனால், சென்னையில் நான் கண்ணால் கண்ட ஒரு நிகழ்ச்சி: பீட்டர்ஸ் சாலையில் ஒரு கொத்தனாரின் மகள் ராஜம், குளிரினாலும், மழையினாலும் பாதிக்கப்பட்டு இறந்து விட்டாள். வீட்டு வசதி இல்லாமல் அந்தக் குடும்பம் தெருவோரத்தில் வசித்து, பல இன்னல்களுக்கு ஆளாகி; கடைசியில் ஒரு மழைக்காலக் குளிரிரவில் அந்த ராஜம் மேல் உலகுக்குச் சென்றுவிட்டாள். இந்த நிகழ்ச்சியின் வெளிப்பாடுதான் அந்தக் கவிதை. உயிருள்ள மனிதர்களுக்குச் சரியான பாதுகாப்பு இல்லை; ஆனால் சிலை மழையில் நனைகிறதென்று கவலைப்படுகிறார்கள் இன்றைய அரசியல்வாதிகள். அந்த வேதனையின் வெளிப்பாடு தான் அந்தக் கவிதை.

சரி, இனி முத்துலிங்கத்தின் வாதத்திற்கே வருவோம். 'ராஜராஜன் கடாரம் கொண்டவன், சாவகம் வென்றவன்' என்கிறார். இதுவா ஒரு மன்னனுக்குச் சிறப்பு! ஒரு நாட்டின் மீது படையெடுத்துப் போவது காலனி ஆதிக்க மனப்பான்மை இல்லையா? விஞ்ஞான சாதனைகளே இல்லாதபோது வியத்தகு கோவிலைக் கட்டினானாம்! அந்தப் பெரிய கோவிலின் ஒரு கல்லையாவது ராஜராஜன் எடுத்துக் கொடுத்திருப்பானா? குடிமக்களைக் கடுமையாக உழைக்கச் செய்து அவர்கள் ரத்தத்திலும் வேர்வையிலும் உருவானதுதான் பெரிய கோவில். சமீபத்தில் ராஜராஜன் முடிசூட்டு விழா நடந்து ஆயிரம் ஆண்டுகள் சென்றதற்கு ஒரு பெரிய விழா நடத்தினார்களே, அப்போது நான் எழுதிய ஒரு கவிதையில்—

"இதனுடைய ஒவ்வொரு கல்லிலும்
என் சகோதரன் தசைகள்
பிதுங்கிக் கொண்டிருக்கின்றன."

என்று குறிப்பிட்டிருந்தேன்.

முத்துலிங்கம் சொல்லும் இன்னொரு வாதம், ராஜராஜன் குடவோலை மூலம் ஊராட்சித் தேர்தலை நடத்தி, தன்னை ஜனநாயகவாதி என்று நிரூபித்தானாம். ஐயா, முத்துலிங்கரே! சற்றுப் பின்நோக்கிப் பார்த்துப் பழம்பெரும் கல்வெட்டுகள் என்ன சொல்கின்றன என்பதைக் கண்டுகொள்ளும். குடவோலை முறைப்படி வோட்டுப் போட உரிமை படைத்தவர்கள் குறிப்பிட்ட ஜாதியைச் சேர்ந்தவர்களும், குறிப்பிட்ட அளவு சொத்துப் படைத்தவர்களும்தான்! இது தான் ஜனநாயகமா?

ராஜ ராஜனுடைய சாதனைகள் பல இருக்கலாம். மறுப்பில்லை. ஆனால் அந்தச் சாதனைகளின் மறுபக்கமும் உண்டு. அந்த மறுபக்கத்தைக் காண்கிற, வெளியிடுகிற உரிமை எனக்கு உண்டு.

எனக்கு ராஜராஜன் மீது அவ்வளவு கோபம் இல்லை. அதைவிட அதிகமாக நமது அரசியல்வாதிகள் அவன் புகழில் குளிர் காய்வதானது கோபமூட்டுகிறது. இதைக் கண்டு கொண்டு என்னால் சும்மா இருக்க முடியாது. இந்த அரசியல்வாதிகள் — அவர்கள் எந்தக் கட்சியானாலும் சரி — பழம்பெருமை பேசியே நிகழ்கால வேதனைகளை மறக்கடிக்கச் செய்கிறார்கள். தங்களையே ராஜராஜனாக நினைத்துக் கொண்டு மலர்க்கிரீடமும், தங்கக்கிரீடமும் அணிந்து கொள்கிறார்கள். பட்டங்கள் பல சூடிக் கொள்கிறார்கள்.

என்னுடைய கவிதையைப் பாட நூலிலிருந்து எடுப்பதில் எனக்கு ஒரு கவலையுமில்லை! புத்தகத்தில் சேர்க்கும் போது என்னிடம் இவர்கள் அனுமதி வாங்கினார்களா, என்ன? இன்றைய பாடத் திட்டத்தில் முந்நூறு மூடத் தனங்கள் இருக்கின்றன. என் கவிதை நீக்கப்படுவது அவற்றுள் ஒன்றாயிருக்கும்.

இன்றைய சமூக அமைப்பில், சிறைக்குப் போவதையும் — தூக்கு தண்டனை பெறுவதையும் பெருமையாக நினைக்கிறேன் நான். நமது அரசியல்வாதிகள் செய்யும் மூடச் சலவைகளை, மௌன சாட்சியாக இருந்து பார்க்க என்னால் முடியாது.

என் கவிதை சரியா, தவறா என்று காலம் சொல்லட்டும். முத்துலிங்கனார் முனைத் தேவையில்லை.

பேட்டி :—இல்லப்பா

படம்: தாமு.

## சீறுகிறார் கவிஞர் இன்குலாப்

## 24

## நான்பட்டது நீர் பட்டீரே

பாதாள கிடங்கில் படிகளில் தீவர்த்தி வெளிச்சத்தில் கொண்டு வர்மன் நடந்து சென்றான்.

பின்னால் நிழல் போல் தொடர்ந்து வந்தாள் சிந்து!

உள்ளே காற்று சிக்கென இறுகிக் கிடந்தது. பழம் வாடை மூக்கை நெரித்தது. வெளிச்சத்திலே அங்குமிங்கும் பக்பக்கிட அலைந்த இருட்டுக்கள் கரைவதற்குத் தயக்கமிட்டன. வௌவால்கள்தான் பயந்து இரவில் சத்தரித்த துணுக்குகள் போல நெடுகிலும் வட்டமடித்தன.

படிகள் நெளிந்து சென்றன. பூகர்ப்பத்துள் இறங்கும் பிரமை. இருபக்கமும் சுவர்கள் குறுகி வந்தன.

கடைசியில் சமதளமான தரையில் நின்றார்கள்.

அந்த தளம் ஒரு நடை தாழ்வாரமாக நீண்டு செல்ல, வரிசையாக கல் அறைகள் தென்பட்டன.

ஒவ்வொன்றுக்கும் வாசலில் கனத்த அழிக்கம்பி!

பின்னால் வந்த சிப்பந்தி ஒருவன் வர்மனிடமிருந்து தீவர்த்தியை வாங்கிக்கொள்ள, வர்மன் ஆவலோடு ஒவ்வொரு இடைகழியையும் கவனித்தான்!

உள்ளே இருந்தவர் அத்தனையும் நடைபிணங்கள்.

வெற்று உடம்புடன் துணி எதுவுமில்லாமல் பலர் நின்று கொண்டிருந்தார்கள்.

பலர் படுத்து எந்த உற்சாகமும் இன்றி இருந்தார்கள்.

ஒன்று இரண்டு பேர் கையை வெளி நீட்டி, "அழைச்சிட்டுப் போ! அப்பா அழைச்சிட்டுப் போ! மகனே அழைச்சிட்டுப் போ!" என்று கத்தினார்கள்.

வர்மன் ஐம்பது வயதுக்கு மேற்பட்டவரைக் கவனித்தான்.

நால்வர் இருந்தார்கள்.

ஒவ்வொருவரும் கண்களில் ஒளியில்லாமல் பார்த்தார்கள்.

முகத்தில் எலும்புகள் தெரிந்தன. சுவர் மூலையில் சாய்ந்து கொண்டு அரைக்கண்ணை மூடியிருந்தார்கள்.

ஒருவர் மட்டும் தொண்டு கிழமாக இருந்தார். கதவு ஓரம் விரக்தியாகப் படுத்து இருந்தார்.

வர்மன் பலமுறை அவர் மீது வெளிச்சம் அனுப்பி, அருகில் அமர்ந்து பார்த்தான்.

மனம் சமுத்திர அலை ரீதியில் அலைபாய்ந்தது. ஒருவேளை அவர் அவனது தந்தையாக இருக்குமோ!

உணர்ச்சி மேலிட, "தம்பி" என்று அழைத்தான். சிப்பந்தி ஒருவன் சட்டெனப் பிரசன்னமானான்.

அதற்குள் கண்கள் எல்லாம் மழையாகிப் பார்வையை மட்டுப்படுத்தின.

கிழவனை இடது கையைத் தூக்கிப் புஜத்தின் அடியில் பார்த்தான்.

கிழவருக்கு அநேகமாக ஜீவனில்லை. என்ன செய்தாலும் மரத்துப் போய்க் கிடந்தார்.

"என்ன வீரரே!" என்றாள் சிந்து.

"இல்லை என் தந்தையின் புஜத்தில் நாகப் பச்சைக் குத்தியிருக்கும்" என்றான்.

வேறு ஆட்கள் அங்கே கிடையாது என்று அறிந்து வந்த வழியே இருவரும் திரும்பி வந்தார்கள்.

மேலே அந்தக் கோட்டையின் உட்புற நிழலுக்குள் மதாம் தூப்ளே காத்திருந்தாள். சின்ன நாற்காலிச் சிவிகை பக்கத்தில் காத்திருந்தது.

"என்ன தம்பி! அவரைக் கண்டாயா?" என்று ஆவலுடன் கேட்க,

"அம்மணி! என் தந்தையைக் காணவில்லையே!" என்று வருத்தம் தெரிவித்தான்.

"அப்படியா! வயதானவர் நாலு பேர் இருந்தார்களே!" என்றாள் அவள்.

"அவர்களில் என் தந்தை யாருமில்லை" என்றான் வர்மன்!

"நல்லது. நாளை ப்ரஸான் ப்யூரோவிலிருந்து (சிறை அலுவலகம்) ரெஜிஸ்த்ர தாகுமான் (டாகுமெண்ட் ரெஜிஸ்டர்) வாங்கிப் பார்ப்போம். ஒருவேளை விடுதலை ஆகியிருக்கலாம்!" என்றாள்.

பிறகு நள்ளிரவில் அந்த சிறு குழு கோட்டைக் கிடங்கிலிருந்து புறப்பட்டு நகர வீதிகளை நோக்கிச் சென்றது.

வர்மன் இரவு உறங்கவில்லை. கைக்கு எட்டியும் வாய்க்கு எட்டவில்லையே என்று வருத்தம். இவ்வளவு சுலபமாகக் கோட்டைக் கிடங்குக்குப் போக அனுமதி கிடைக்கும் என்று நினைக்கவில்லை. மதாம் தூப்ளே தயவால் அது நடந்துவிட்டது. அவனது தந்தை எங்கே போனார்?

தாயாரைப் பிரிந்து வந்து ஆறு மாதமாகி விட்டது.. இப்போது அவள் நினைவு குபீரென்று வந்தது. கண்ணீர் ஆறாக வந்தது! தந்தையை அழைத்துச் செல்வோம் என்று என்ன பெருமிதத்துடன் வந்திருந்தான்!

**மோகினி திருக்கோலம்**

ஸ்ரீவேணுகோபாலன்

மறுநாள் மதியம் இரண்டு மணிக்குமேல் மதாம் தூப்ளே திரும்பவும் கூப்பிட்டுவிட்டாள்.

அவன் போன போது சிந்துவும் வந்திருந்தான். மதாம் அருகில் மற்றொரு ஆசனத்தில் அமர்ந்து அவள் குறுகுறுப்பாக அவனைப் பார்த்தது மனத்தை என்னவோ செய்தது.

கண்ணை எடுக்க முயன்றாலும் அடிக்கடி அது அவன் மீது விழுந்து மீண்டும் மீண்டும் வேதனையை வாங்கிக் கொண்டிருந்தது.

மதாம் தூப்ளே ஓஃபிஸியேக்களை (அதிகாரிகள்) அழைத்திருந்தாள்.

எல்லோரும் எட்டு வருட தஸ்தாவேஜுகளைத்தான் தேட முடிந்தது. அதற்கு முன்னன தஸ்தாவேஜுகள் இங்கிலிஷ்காரர் படையெடுப்பில் எரிந்துவிட்டது.

இருக்கும் தஸ்தாவேஜுகளைப் பார்த்ததில் வர்மன் தந்தையான பாளையக்காரரைப் பற்றி எந்தக் குறிப்பும் கிடையாது.

எல்லோரும் அறிவித்துவிட்டு மதாமிடம் விடைபெற்றுப் போனார்கள்.

வர்மன் திகைப்புடன் நின்றான்.

கண்களில் சலனமில்லை.

அவன் எடுத்துக் கொண்ட யாத்திரை லட்சியம் அதோடு முடிகிறது என்று நினைத்தான்.

"கலங்காதே தம்பி!" என்று அருகில் வந்து தட்டிக் கொடுத்தான் ம தா ம்.

"இந்த நகரில் இருந்து, கொஞ்சம் தேடிப் பார். கிடைத்தாலும் கிடைக்கலாம். சிலர் கப்பல் ஏறி வேலை செய்யப் போவார்கள். கப்பல் இங்கே வந்தால் கண்டுபிடித்துவிடலாம். தைரியம் இழக்காதே! கட்டாயம் கிடைப்பார்! அவர் கிடைக்கும் வரை நமது சமூகத்திலேயே இரு!" என்றான்.

மறுநாள் கப்பல் மாலுமிகளுக்கான ப்யூரோ (அலுவலகம்)க்குப் போய் பழைய கவடிகளைத் தேடிக்காணாமல் மனம் நொந்து வெளியே வந்தான் வர்மன்.

மனம் புழுங்கியது. சற்று எட்டத்தில் நீல அலைகள் பாய்ச் சுருள்கள் போல் மடிய, பார்க்கும் தூரம் வரை நாட்டுப் படகுகள்

மிதந்து கொண்டிருந்தன.

'அப்பா! எங்கே இருக்கிறாய்? எங்கே போனாய்?' என்று புலம்பியவாறு சாலையில் தெற்கு நோக்கி நடந்து, தோப்புகளினூடே புகுந்தான்.

மனம் வெதும்பியது. என்றுமில்லாத நிராசையில் ஒருவித விரக்தியும் ஏற்பட்டது.

தொட்டதும் நழுவி, சொன்னதும் நழுவியது போலிருந்தது.

வாழ்க்கையின் ஆதாரங்கள் எல்லாம் சுழன்று விட்டன போல் தோன்ற, இனி வாழ்க்கையால் என்ன பயன் என்று கூட நினைத்தான்.'

தென்னந்தோப்புகள் பரந்து நப்பங்கழி வரை நின்றிருந்தன.

நிலக் கண்ணாடி போன்ற அந்த நீர்க்கரை வந்ததும் வர்மன் நின்றான்.

என்ன நேர்த்தி வாய்ந்த காட்சி! பாவும் தென்னையும் பசும் பொன்னாய் விதானம் விட்டிருந்தன.

சூரிய ஒளிகள் இலை இடுக்குகள் வழியே தகதகத்துக் கொண்டிருந்தன.

நீர்த்துறையிலிருந்து குளிர் காற்று மெல்ல சடையாடிப் பறந்தது. எதிர்க்கரையில் காடுபோல் தோப்புகள் மண்டியிருந்தன.

மனம் லகுவாகப் பறக்க, வேதனையின் கனம்தான் அடிக்கடி கீழே இழுத்தது.

கண்கள் வெறுமையாக அங்கங்கு பரியாற, ஒரு கணத்தில் எதையோ நோக்கித் திடுக்கிட்டு நின்றான்.

அங்கே நீர்க்கரை ஓரமாக வளைந்து ஓடிய தென்னை மீது கண்ணை மூடிச் சாய்ந்திருப்பது யார்!

சிந்துவா!

—"சிந்து!" என்றான்.

அவள் திரும்பிப் பார்க்கவில்லை.

அவன் அடிகள் வைத்து அருகே போனான்.

சிந்து சோகத்தில் இருந்தாள்.

கன்னத்தில் வைரத் துளிகள் உருண்டிருந்தன.

முகவாய், கழுத்து எல்லாம் நீர் உலர்ந்த கறைகள் தெரிந்தன.

"சிந்து" என்றான்.

விழித்தாள் அவள். கண்ணை இமைத்துப் பார்த்தாள். "நீங்களா அழைத்தீர்கள்!" என்றாள்.

"ஆமாம் சிந்து! அம்மணி என்று அழைப்பேன். நிறையப் பழகிவிட்டேன். இனி நான் ஊர் திரும்பப் போகிறேன். ஒரு சோகம் நம் இருவரையும் நெருக்கி விட்டாற்போல் தோன்றுகிறது. ஒரு பரிச்சயத்தின் நெருக்கமான சாயலைக் காட்டவே 'சிந்து' என்றேனு! நான் ஊர் திரும்பப் போகிறேன் சிந்து" என்றான் அவன்.

சிந்து சிலைப் போலநின்றாள். கண்ணிலிருந்து சோகம் இறங்கியது. விழியை மட்டும் சிறு சிறு சாய்வில் நகர விட்டாள்.

"வர்மரே!" என்றாள். ஒரு நீண்ட மூச்சை இழுத்து விட்டாள். "நானும் தங்களை நெருக்கமாக் அழைக்கிறேன். தாங்கள் மனத்தில் பெறும் வெறுமையை நானும் என்றைக்கோ பெற்றுவிட்டேன். அதுவும் இருநாளாகநான் அநுபவித்தசூன்யத்திற்குஎல்லையில்லை! ஒரு வேளை பிரபஞ்சம் பிறப்பதற்கு முன் அப்படி ஒரு மாபெரும் சூன்யம் இருந்திருக்கலாம். நானும் விரக்தியில் இருக்கிறேன் வர்மரே! சிலசங்கைக் காட்டுக்குள் போய் என் குடும்பத்துடன் வாழ விரும்புகிறேன். நாடு என்று சீர்திருந்தி வருகிறதோ அப்போது வரட்டும் பார்த்துக் கொள்ளலாம். நீங்கள் இங்கே எப்படி வந்தீர்கள் வர்மரே!"

"நடை போனபடி வந்தேன். இனி என்

## அருள்வாக்கு

பூர்வீகர்கள் ஒழுகிய வழியில் போவதற்கே ஆசாரம் என்று பெயர். ஆசார — வ்யவஹாரங்கள் என்று சொல்வதுண்டு. வ்யவஹாரம் என்பது நிகழ்கால நடப்பாக மட்டும் இருப்பது. ஆசாரம் என்பது பூர்வத்தில் நெடுங்காலமாக நம் முன்னோர்கள் தங்கள் நன்னடத்தைக்கு ஆதாரமாக என்ன செய்தார்களோ, அது. அதற்கு நீண்ட காலம் நிலைத்து நின்றதால் மரத்தில் உண்டாகிற வஜ்ரம் போன்ற உறுதி உண்டு. அந்த உறுதியான அஸ்திவாரத்தின் மேல் நாமும்



நம் வாழ்முறையை எழுப்பிக் கொண்டால்தான் நமது வாழ்க்கை ஸ்திரமாக இருக்கும்.

நம் பூர்வர்கள் எப்படிப்பட்ட நெறிகளைக் கைக்கொண்டிருந்தார்களென்றால், நம் சாஸ்திரங்களிலும் சம்பிரதாயங்களிலும் என்னென்ன உண்டோ அவற்றைத்தான். அவற்றை அவர்கள் அநுஷ்டித்த சிறப்பினால்தான் நம் தேசமே தொன்றுதொட்டு பரமார்த்திகத்திலும் ஞானத்திலும், பக்தியிலும் அதுமட்டுமின்றி எல்லாக்கலைகளிலுமேகூட லோகத்திலேயே முதன்மை ஸ்தானம் பெற்றிருக்கிறது. இன்றைக்கு நாம் இவ்வளவு சீரழிந்துவிட்ட பிறகும் கூட நாம்தான் ஆத்யாத்மிகத்தில் தங்களுக்கு வழிகாட்ட வேண்டும் என்று மற்ற தேசத்தவர்கள், மற்ற மதஸ்தர்கள் இங்கே உள்ள ஆச்ரமங்களுக்குக் கூட்டம் கூட்டமாக வந்துகொண்டிருக்கிறார்கள் என்றால் அது பூர்வாசாரம் 'பேடல்' பண்ணிவிட்ட வேகத்தின் எஞ்சிய பலத்தால்தான்!

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி**
**சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**



லாட்டரிகளில் வெற்றிபெறும் டிக்கெட்டுகள் மூலம் கறுப்புப் பணத்தில் பெரும் பகுதி வெள்ளையாக்கப்படுவதற்காகப் புதுடெல்லியில் உள்ள ரீகல் சினிமாவிற்குப் பின்புறம் நிறைய ஏஜெண்டுகள் இருப்பதாகச் சமீபத்தில் 'ஸ்டேட்ஸ்மென்' பத்திரிகை நிறுவனம் நடத்திய ஆய்வுகளிலிருந்து தெரிய வந்திருக்கிறது. இன்று லாட்டரித் துறையில் மிகவும் பிரபலமடைந்து வரும் நிறுவனம் சந்திரா ஏஜென்ஸீஸ். இவர்கள் அளிக்கும் பரிசுத் தொகைகள் அதிகம். இந்த நிறுவனத்தின் உரிமையாளர்களில் தே. எல். கன்னா, பிரணப் முகர்ஜியின் மனைவி, அவரது மூத்த சகோதரரான பரதாஜி ஆகியோர் முக்கியமானவர்கள். பல ஆண்டுகளுக்கு முன்னர் ராஜீவ் காந்திக்கு டியூட்டராக இருந்தவர் பரதாஜி. ஹைதராபாத்தில் உள்ள டி. டி. ஹாஸ்பிடல் சார்பில் நடத்தப்படுவதாகக் கூறப்படும் இந்த நிறுவனத்தின் ஆந்திர லக்ஷ்மி சூப்பர் பம்பர் லாட்டரியில் ஆஸ்பத்திரிக்குக் கிடைக்கும் தொகை என்னவோ ஐந்து சதவீதம் தானாம். அதாவது ஒரு கோடி ரூபாய். விளம்பரச் செலவு, டிக்கெட்டு அச்சடிப்பு, வரி, பரிசுத் தொகை எல்லாம் போக இந்த நிறுவனத்துக்குக் கிடைக்கும் லாபம் இரண்டு கோடி ரூபாய்!

(நன்றி: சண்டே அப்சர்வர்) அ. குமார்.

செய்வேன் என்ற வெறுமைதான் என்னைப் பிடுங்கி எடுக்கிறது. ஒருசமயத்தில் எதுவுமே பிடிக்கவில்லை! ஊரை நோக்கித் திரும்பலாம் என்ற எண்ணம் தான் மேலே எழுந்து விட்டது.''

''ஏன்? என்னைப் போல் நீங்கள் ஒரு நாட்டையா திரும்பப் பெற வந்தீர்கள்? ஒரு தந்தையைத்தேடி வந்தீர்கள்! அவ்வளவுதானே! இன்னும் கூடத் தேடலாமே! மதாம்தான் உதவி செய்வதாகக் கூறி இருக்கிறாளே!''

''இல்லை சிந்து! எப்போது கிடங்கில் இல்லை என்று தெரிந்து விட்டதோ, இனித் தேடி என்ன லாபம்?''

''அப்போது போகத்தான் முனைந்துவிட்டீர்கள்!''

''ஆனால்...?'' என்று நிறுத்தினான்.

''என்ன?'' என்று திரும்பினாள்.

''புதுப்பாசங்களின் வேர்கள் அங்கங்கே என்னைப் பிணைத்திருக்கின்றன. தாய்தான் எனக்கு நேசத்தைத் தந்தவள். ஆனால் தாயைவிட நூதனமான நேசம் ஒன்று இருக்கிறது என்பதை இந்தச் சில வாரங்களில் தான் உணர்ந்தேன்.''

நிமிர்ந்து அவளைப் பார்த்தான் வர்மன்.

அவள் கண்களில் ஒரு தேடலான ஆவல் இருந்தது.

''இந்த சில வாரங்களிலா வர்மரே!''

''ஆமாம் சிந்து! அந்த நூதன சிநேகம் என் மன ஆழங்களில் மட்டுமல்ல, உள்ளே என் ஜீவ ஆழத்திலும் தொட்டு நிற்பதை உணர்கிறேன். அந்த சிநேகம் விட்டப் பாசக் கயிறு என்னை 'அசையவில்லேன்' ஆகக் கட்டியிருப்பதை இப்போது இந்தக் க்ஷணத்தில் உணர்கிறேன் சிந்து!'' என்றான் அவன்.

சிந்து கண்களைக் கொட்டினாள். அவள் முகத்தில் தோன்றிய அந்த உணர்ச்சி பரவசமா அல்லது சோகமா என்று இனம் காண முடியாமல் இருந்தது.

''வர்மரே! அதென்ன நூதன சிநேகிதம்?'' என்றாள்.

வர்மன் உடன் பதில் சொல்லவில்லை.

பிறகு, ''இந்த நூதன சிநேகம் உங்களுக்கு ஏற்படவில்லையா?'' என்றான்.

அவள் பதில் சொல்லவில்லை.

''சொல்லு சிந்து! சொல்லு! உங்களுக்கு இது ஏற்படவில்லையா? இந்தச் சில வாரங்களில் நான் பட்ட பாடுகள் அனைத்தும் நீங்கள் அனுபவிக்கவில்லையா? நான் பட்ட துயரை எல்லாம் நீங்களும் அனுபவிக்கவில்லையா? அதன் பலன்தானே இப்போது இங்கே சூன்யம் பிடித்தது போல் இருவரும் வந்து நிற்கிறோம்!'' என்றான்.

அவள் என்ன சொல்லப் போகிறாள்?

வர்மனின் மனம் படபடத்தது.

அவள் கண்களில் நீர் வந்து கொண்டிருந்தது.

(தொடரும்)



திவாகரா இப்படிச் சொன்னான்? கிருஷ்ணனால் நம்பவே முடியவில்லை. திவாகருக்கும் தனக்கும் எத்தனை வருடப் பழக்கம் என்பதை நினைக்கும் போது அவன் சற்றுமுன் பேசியதெல்லாம் விவேகமானதாகத் தோன்றவில்லை. இத்தனைக்கும் திவாகரும் ஒன்றும் உச்சாணிக் கொப்பில் இருக்கவில்லை. கிருஷ்ணனைப் போல் ஒரு பாங்க் கிளார்க்தான். ஆனால் ஒரு பாங்க் கிளார்க் என்று நினைத்துக் கொண்டா அவனைத் தேடிக் கொண்டு தங்கை ஜாதகத்தோடு போய் வரன் பேசினான், கிருஷ்ணன்? திவாகரன் வேறு அடிக்கடி கிருஷ்ணனைப்பார்க்க வீட்டிற்கு வரும்போது தங்கை வித்யா அவனுக்குப் பழக்கமானவள்தான். திவாகர், வித்யா இருவருமே பரஸ்பரம் ஒருவ்ரை ஒருவர் விரும்பியது வாஸ்தவம். விருப்பத்தை நிறைவேற்ற கிருஷ்ணன் ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தான். திவாகர் தன் வயதான பெற்றோருடன் வந்து வித்யாவைப் பெண் பார்த்தான். 'பெண்ணைப் பிடித்து விட்டது... மேற்கொண்டு பேச நீ வீட்டுக்கு வா கிருஷ்ணா!' என்று திவாகர் சொன்ன போது கிருஷ்ணன் அதைச் சகஜமாய் நினைத்துக் கொண்டுதான் போனான். ஆனால் நட்பு வேறு, உறவு வேறு என்று நிரூபிக்கிற மாதிரி திவாகர்தான் எப்படிப் பேசிவிட்டான்?

''கிருஷ்ணா! எதையுமே 'பளிச்'னு பேசிடறது என் பழக்கம்னு, உனக்கு இந்த இருபத்தி அஞ்சு வருஷமா நன்னாத் தெரியும். இப்ப என் கல்யாண விஷயத்திலும் அதே மாதிரி பேசறதுதான் எனக்கும் நல்லது. உனக்கும் நல்லது...''

திவாகரின் நறுக்குத் தெறித்தாற் போன்ற ஆரம்பம் கிருஷ்ணனுக்குப் புதிதாக இருந்தது.

இருந்தாலும் சிரித்தபடி, ''சொல்லு திவா!'' என்றான்.

''கிருஷ்ணா! கல்யாணம் ஸிம்பிளாய்ச் செய்தாலும் சீர்வரிசையில் எனக்கு ஒரு



சன்னாசி முக ரோமத்தைத் தேய்த்து சொறிந்த படியே சொல்ல ஆரம்பித்தான். "அது வந்து தம்பீ... நம்ம அம்மிணிக்கும், சடைமுடிக்கும் அடுத்தவாரம் பரிசம் போட நான் குறிச்சிட்டேன்.- எல்லாம் தயார்... திடீர்னு இந்த சடைமுடி முந்தாநாள் வீடு வந்து ஒரு கன்டிசன் போட்டுப்புட்டான்.." சன்னாசி நிறுத்தி விட்டு உதடுகளைத் தூக்கிக் குவித்து எங்கோ பார்த்தபடி மறுபடியும் பேச ஆரம்பித்தான். "அதாவது இத்தினி நாளும் சகஜமா இருந்த பய, இப்பக் கண்ணாலம்னு வர்றப்ப மாப்பிள்ளை ஜோராய்ச் சீர் கேக்குறான்..."

"சீரா?"

"ஆமாங்க... சீர்தான்... தம்பீ! நாங்க தாழ்ந்த சாதிக்காரங்க... எங்களுக்கு உழைப்பு தான் சொத்து...நான் ஒரு இருபது வருஷம் முன்னாடி எங்க கிராமத்து ஊர்க் கோடியிலே தரிசாக் கெடந்த நெலத்தைத் துணிஞ்சி ஒருத்தனா இறங்கிச் சுத்தம் பண்ணினேன் பிரமாத நிலமில்லே... நூறடி சதுரம்தான் அதுல கேணி வெட்டி", ஏதோ பயிர் பாசனம் செஞ்சி அதுல வர்ற நாலு காசுல தங்கச்சி, நான், என் பொண் சாதி ஜீவனம் செய்யறோம்..."

"சன்னாசி! அந்த நிலத்தையா உன் மருமகன் கேட்கிறார்?" என்ற கிருஷ்ணன் சற்று அதிர்ந்து தான் போனான்.

"ஆமாமுங்க... இதுல இன்னொண்ணு.. நெலம் சொந்தமில்லே.. புறம்போக்கு நெலம்தானே? விவரம் சொல்லி கலெக்டர் அய்யாகிட்ட முதல்ல எனக்குச் சொந்தமாய் பட்டா பண்ணிக்கிட்டுப் பெறவு மருமகனுக்கு எழுதிக் கொடுத்துடணும்..."

நல்ல கதை சன்னாசி! உன் சொந்த நிலத்தைச் சடைமுடி சீராய்க் கேட்கிறது நியாயமா?"

"எங்க கல்யாணம் முடிஞ்ச பிறகு தான் என் மனைவிக்கு ஏற்கெனவே ஒரு காதலன் இருந்தான் என்ற உண்மை தெரிஞ்சது.

"அடப்பாவமே... அப்புறம் என்ன ஆச்சு?"

"அந்த அக்கிரமத்தை என்னால் பொறுத்துக்க முடியலே. பேசாமே அவளை டைவர்ஸ் பண்ணிட்டு என் காதலியைக் கல்யாணம் செய்துக்கிட்டேன்!"



"தம்பீ! நீங்களும் என் தங்கச்சி மாதிரியே கேக்கறீங்களே? உண்மையில அம்மிணிக்கு நான் இங்கிட்டு கலெக்டரய்யாவைப் பாக்க வர்றதும், நிலப்பட்டா வாங்கப் போறதும் புடிக்கவே இல்லீங்க... சத்தம் போடுது வீட்ல..."

கிருஷ்ணனுக்குச் சன்னாசியைப் பார்க்கவே பரிதாபமாய் இருந்தது. சொந்த நிலத்தை வைத்துக் கொண்டு இருப்பவர்களே பிரச்னையைத் தீர்க்க முடியாமல் தவிக்கும் போது இவன் என்ன தைரியத்தில் புறம்போக்கு நிலத்திற்குப் பட்டா எழுதி வாங்கப் புறப்பட்டு வந்துவிட்டான்? இந்த சடைமுடிக்குத் தான் புத்தி கிடையாதோ? இவன் முறைப்பிள்ளையாய் இருக்கலாம். முறையான பிள்ளையாய்த் தெரியவில்லை.

சடைமுடியைப் பற்றிக் கணிக்கும் போதே கிருஷ்ணனின் மனத்தில் திவாகரும் வந்து போனான். இருவரும் தராசின் சம எடையில் நின்றனர்.

* * * * *

ஆபீஸ் வந்து விட்டது. சன்னாசியை மறந்து உள்ளே நுழைந்து வேலையில் ஆழ்ந்தான். கிருஷ்ணன்.

மாலை வீடு திரும்பியதும், திவாகர் புது ஸ்கூட்டர் சீராய் கேட்டதை வேதனையாய்த் தங்கையிடம் சொல்லிவிட்டு அடுத்தகணம் புயலை எதிர்பார்த்தான்.

ஆனால் வித்யா பதிலே பேசவில்லை.

மௌனம் சம்மதத்திற்கு அறிகுறியா?

கிருஷ்ணன் இலேசாய் உடைந்துபோனான்.

மறுநாள் அவனுக்கு இருந்த மன வருத்தத்தில் சன்னாசியை மறந்தே போனான்.

நான்கு நாட்கள் கழிந்து. அன்று காலை எழுந்த போது வித்யா. 'அண்ணா! திவாகர் ஸ்கூட்டர் கேட்கிறது தப்பில்லே... உனக்கு வரப் போகிற ஸ்கூட்டரை அவருக்குச் சீர் கொடுத்துட்டு நீ அப்புறம் வாங்கிக் கொண்டாயானால் கல்யாண சமயம் நிறைய கடன் வாங்க நேராது..' என்று போதித்ததைக் காது எரிய எரியக் கேட்டுவிட்டு, வெறுப்பும், வேதனையுமாய் ஆபீஸ் வந்து கொண்டிருந்தவனை "தம்பீ..." என்ற குரல் 'பிரேக்' போட்டது போல் நடையைக் கட்டி நிறுத்தியது. திரும்பிப் பார்த்தான்.

சன்னாசிதான்! முகத்தில் வழியும் வியர்வையை இரண்டு முழங்கைகளாலும் மாற்றி மாற்றித் துடைத்தபடி சன்னாசி அருகில் வந்தான்.

கிருஷ்ணனுக்குச் சட்டென அவன் நிலப் பட்டா சமாசாரம் நினைவுக்கு வந்துவிட்டது.

"சன்னாசி! என்ன ஆச்சு?" என்றான் பரபரப்பாய்.

"தம்பீ! நீங்க அன்னிக்குச் சொன்னது நிஜம். கலெக்டரய்யாவைப் பாக்குறது ஒண்ணும் அத்தனை சுளுவு இல்லே... நாலுநாள் நாளும் தினம் கிராமத்துலேந்து எட்டு மைல் நடையாய் நடந்தே தேய்ஞ்சிடுவேன்னு நினைச்சேன்.. நேத்திக்கு காத்தான் சாமிய வேண்டிக்கிட்டு வந்தேன். கலெக்டரய்

புது ஸ்கூட்டர் இருந்தாகணும்... இது என் கட்டளை இல்லை... கோரிக்கைதான்... தயவு பண்ணி நீ யோசிச்சி முடிவு சொல்லு.''

இவ்வளவுதான்... இதற்குமேல் திவாகர் எதுவும் பேசவில்லை. இது போதுமே... கிருஷ்ணனுக்கு வயிற்றில் 'சொரேர்' என்று கத்தி பாய்ந்த மாதிரி ஆகிவிட்டது. குருவி மூக்கில் சேர்ப்பது போல் ஆறு வருஷமாய்ச் சேர்த்த பணத்தில் கிருஷ்ணன் அடுத்த வாரம் ஒரு புது ஸ்கூட்டர் வாங்க நினைத்தது. திவாகருக்குத் தெரிந்ததுதான். தெரிந்தேதான் கேட்கிறானா? வித்யாவிற்கு மட்டும் தெரிந்தால் கொதித்துப் போய்விடுவாள். ''ஸ்கூட்டராமே, ஸ்கூட்டர்! அண்ணா! நீ ஆறு வருஷமாய் ஒரு ஸ்கூட்டருக்குப் பணம் சேர்க்கிறதும், அதை 'புக்' பண்ணிக் காத்துக் கொண்டிருந்ததும் இப்படி யாருக்கோ தாரை வார்க்கத்தானா? அண்ணா! 'ஸ்கூட்டரும் இல்லை.. என் தங்கையும்



எனக்கு இல்லை'ன்னு பளிச்சினு சொல்லிட்டு வா...''

கிருஷ்ணனின் கற்பனையில் தங்கை கையை வீசி, விழிகளை உருட்டி வார்த்தைகளைத் தெறித்தாள்.

* * * * * *

யோசித்தபடி அந்த காங்கிரீட் பிளாட்பாரத்தையில் நடந்து கொண்டிருந்தவனை, ''தம்பி!'' என்ற குரல் தடுத்து நிறுத்தியது.

கிருஷ்ணன், சட்டென குரலுக்குரியவனைத் திரும்பிப் பார்த்தான். அவனுக்கு வயது நாற்பது இருக்கும். எண்ணெய் காணாத பரட்டைத்தலை, ஏழைமையை எடுத்துரைத்தது. அவன் போட்டுக் கொண்டிருந்த சட்டையும், வேட்டியும் ஒரு காலத்தில் வெள்ளையாய் இருந்திருக்க வேண்டும். இப்போது சொல்ல இயலாத நிறத்தில் இருந்தது.

நின்ற கிருஷ்ணனின் அருகில் வேகமாய் வந்து, ''தம்பி! தம்பி! இந்த கலெக்டர் ஆபீசு எப்ப தொறக்கும்?'' என்று அந்தப் பெரிய கட்டிடத்தைக் கைநீட்டிக் காட்டிக் கேட்டான்.

கிருஷ்ணனுக்கு அவன் அவசரமும், ஆவலும் வினோதமாய் இருந்தது.

''பத்துமணிக்குத் திறக்கும்...'' என்றபடி கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஒன்பதுதான் ஆகி இருந்தது.

''நல்லதுங்க... ஆபீசு தொறந்ததும் கலக்டரய்யாவைப் பார்க்கணும்... நெலப் பட்டா விஷயமுங்க...''

கிருஷ்ணனுக்குச் சட்டெனச் சிரிப்பு வந்து விட்டது. சாமான்ய ஏழை ஒருவன் நிலப்பட்டா விஷயமாய் கலெக்டரைச் சந்திப்பது அத்தனை எளிதா என்ன?

''ஏனுங்க, சிரிக்கிறீங்க?'' என்றான் அவன் அப்பாவித்தனமாய்.

கிருஷ்ணன் அவன் அருகே போய்த் தோளைத் தொட்டான்.

''உன் பேர் என்ன?'' என்றான், ஆதரவாய்.

''சன்னாசிங்க...''

''சன்னாசி! நான் சொல்றேன்னு நினைக்காதே... கலெக்டரப் பார்க்கிறது அத்தனைச் சுலபமில்லே... ரொம்ப கஷ்டம்...''

''சுளுவோ, கஷ்டமோ இந்த சன்னாசி இன்னிக்கு கலெக்டரய்யாவைப் பார்த்தே ஆகணுமுங்க... அம்மணி கல்யாணம் ஆக வேண்டாமுங்களா?''

''அம்மணியா? யாரது?''

''கூடப் பிறந்த தங்கச்சிங்க... தாயில்லாப் பொண்ணை நான் பெத்த மக மாதிரி இருபது வருஷம் வளர்த்திட்டேன். சொந்த அத்தை மகன் சடைமுடி அவளுக்குக் காத்திட்டு இருக்கிறான்...''

''சன்னாசி! நீ கலெக்டரைப் பார்க்கிறதுக்கும் அம்மிணி சடைமுடியைக் கட்டிக்கிறதுக்கும் என்ன சம்பந்தம்?'' கிருஷ்ணன் ஆவல் கலந்த குழப்பமாய்க் கேட்டான்.

ஷைலஜா

யாவே என்னைக் கூப்பிட்டுப் பேசினாரு....
'உன் மாதிரி ஏழைகளுக்கு நிசமா உதவி செய்வோம்... நேத்திக்கே நான் உன் கிராமத்துக்குக் காரில் வந்து உன் நிலத்தை மேற்பார்வை இட்டேன்... கஷ்டப்பட்டு உழைச்சி, தரிசுப் பாறையை நிலம் பண்ணி இருக்கே! அந்த நிலம் புறம்போக்கு நிலமுன்னாலும் பாடுபட்டு நீ உழைச்சதினாலே உனக்குச் சொந்தம்தான். நாளைக்கு நீ ஆபீசு வந்து பட்டா வாங்கிட்டுப் போ...' அப்படீன்னு சொல்லிட்டாரு..."

சன்னாசி சின்னக்குழந்தை போலக் கண்களை மலர்த்திக் கைகளைக் கொட்டிச் சொல்லி முடித்தபோது கிருஷ்ணனுக்குத் திகைப்பாகிவிட்டது. சன்னாசி அதிர்ஷ்டக்காரன் தான்...

"தம்பி! என்ன அப்படியே பிரமிச்சி நின்னுட்டீங்க? இருங்க... இதோ இப்ப ஆபீசுக்குள்ள போய் நிலப்பட்டா வாங்கிட்டு வரேன்... பார்த்துட்டுப் போங்க... இப்ப சடைமுடி கூட இங்கிட்டு வரப் போறான்..."

"சடைமுடியா? எதுக்கு?"

"என்ன தம்பி இப்படிக் கேக்கறீங்க? பட்டா 'சரியா' இருக்குதான்னு, படிச்சவுக புள்ள பார்க்க வேணாமா?"

கிருஷ்ணனுக்கு நிலப்பட்டாவைப் பார்த்தாக வேண்டியதில்லை. அந்த சடைமுடி? அவனைப் பார்த்தே ஆக வேண்டும் போல இருந்தது. ஆபீஸிற்கு ஒருமணி நேரம் தாமதமாய்ப் போய்ச் சொல்லிக் கொண்டால் போயிற்று. சன்னாசி கேட்டுக் கொண்டதற்காகவாவது இருக்க வேண்டும்.

இருவரும் அந்த கலெக்டர் ஆபீஸ் கட்டிடத்திற்குள் நுழைந்தனர். வராந்தா பெஞ்சில் இருவரும் உட்கார்ந்த பத்து நிமிஷத்தில் பியூன் வந்து சன்னாசியை அழைத்தான்.

மேல்துண்டை எடுத்துப் பணிவாய்க் கட்டியபடி சன்னாசி பரபரப்பாய் எழுந்தான். சிலநிமிடங்களில் சன்னாசி ஓடி வந்தபோது அவன் முகத்தில் சந்தோஷம் பெயிண்ட் அடித்தது போல் அப்பி இருந்தது. சிலுப்பிக் கொண்டிருந்த தலைமுடியில் கூட உற்சாகம் பீறிட்டது.

"தம்பி! எல்லாம் நல்லபடி முடிஞ்சது' என்றபடி கிருஷ்ணனின் அருகில் வந்தவன் சட்டென்று தூரப் பார்த்துவிட்டுக் கத்தினான். "சடைமுடி வந்தாச்சி!"

கிருஷ்ணன் திரும்பிப் பார்த்தான். வந்து கொண்டிருந்த சடைமுடி ஒல்லியாய், கறுப்பாய் இருந்தான். தலையில் வண்டி எண்ணெய் வெய்யிலில் பளபளத்தது. கருநீல அரைக்கைச் சட்டையும், வேஷ்டியும் அவன் நிறத்தை இன்னும் கெடுத்தது. முகம் அசாத்தியமாய் வாழைக்காய் போல இருந்தது. நடக்கிற நடையில் செயற்கைத்தன மிடுக்கு தெரிந்தது.

கிருஷ்ணன் முகத்தை சுளித்தபடி, "அதான் சடைமுடியா?" என்றான்.

சன்னாசி அருகில் வந்த சடைமுடி, "மாமா! பட்டா, ரெடியா?" என்றான், விறைப்பாக.

சன்னாசி உடனே குழைக் கும்பிடு போட்டான்.



# கே. பாலசந்தரிடம் ஒரு கேள்வி

**போட்டி : 48**

பல காலமாக டைரக்டர் கே. பாலசந்தரின் கலைப்படைப்புகளைக் கண்டுகளித்து அவரிடம் எவ்வளவோ கேட்க வேண்டும் என்ற ஆர்வத் துடிப்புடன் இருக்கும் பல்லாயிரக்கணக்கானவர்கள் உடனே பேனாவைக் கையில் எடுக்கலாம். கீழே வெற்றிடத்தில் நீங்கள் மிக முக்கியமானது என்று கருதும் ஒரே ஒரு கேள்வியை மட்டும் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். உறையின்மீது கே. பாலசந்தரிடம் ஒரு கேள்வி என்று குறிப்பிடல் அவசியம். டைரக்டர் பாலசந்தர் அவர்கள் சிறந்த கேள்விகளைத் தேர்ந்தெடுத்து கல்கி வழங்கும் நேரம் நல்ல நேரம் வானொலி நிகழ்ச்சியில் பதிலளிப்பார். அவை கல்கியிலும் தொடர்ந்து பிரசுரமாகும். இவ்வாறு ஏற்கப்படும் கேள்விகளுக்குப் பரிசு உண்டு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப்புடவை.

முதல் பாலசந்தர் நிகழ்ச்சி 1.4.85—ல் ஒலிபரப்பாகும்.

**இன்னும் 5 பட்டுப் புடவைகளே பாக்கி. இந்த ஐந்து பேரில் ஒருவர் நீங்களாக இருக்கலாம்! உடனே செயல்படுங்கள்!**

**முடிவு தேதி : 15.4.85**

**பட்டுப்புடவை பரிசுத்திட்டம்**

என் பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

"ஆச்சி! நல்லா ஆச்சி..." என்றபடி வேகத்துண்டைக் கவனமாய் விலக்கி உள்ளே இருந்த நிலப்பட்டா பத்திரத்தாளை எடுத்தான்.

சடமுடியை நோக்கி பத்திரத்தை சன்னாசி நீட்டியபோது 'வெடுக்' என ஒரு வளைக்கை அதைப் பறித்தது.

கிருஷ்ணன் திடுக்கிட்டுப் பின்புறம் திரும்பினான். அதற்குள் சன்னாசியும் சடமுடியும் ஏக காலத்தில், "அம்மிணி" என அலறினர்.

பத்திரத்தைத் தன்னோடு பத்திரப்படுத்திய வாறு அம்மிணி சடமுடியைப் பார்த்துச் சொன்னாள். "ரொம்ப நன்றி ஐயா உமக்கு!"

"ஏய்...கிண்டலா? என்ன விஷயம்?" சடமுடி சீறினான். கோபத்தில் அவன் முகம் இன்னும் நீண்டு போனது.

"ஆமாய்யா... ஒரு பொறம் போக்கு நெலம் உன் தூண்டுதலிலே எங்க அண்ணைச் சிக்குச் சொந்த நிலமாய்டிச்சி... அதுக்கு நன்றி சொல்ல வேணுமா?"

"அம்மிணி! நன்றி சொல்ல இந்த இடத்துக்கு நீ வர வேண்டியது அவசியமில்லே.." சடமுடி கோபமாய்க் கத்தினான்.

கிருஷ்ணனுக்கு ஏதோ நாடகம் பார்ப்பது போலிருந்தது.

கிருஷ்ணன் வியந்து கொண்டே இருந்த வேளையில் அம்மிணி திடீரென சடமுடியை நெருங்கி வந்து சொன்னாள். "ஐயா முறைப் பிள்ளை... உமக்கு நன்றி சொல்ல மட்டும் நான் இங்கே வரலே... நாக்கைப் பிடுங்குற மாதிரி நாலு வார்த்தைக் கேக்கவும் தான் வந்தேன்... ஏன்யா. இந்தச் சிறுதுண்டு நிலத்து மேல உனக்கு ஏன் இமா் ஆசை? இந்த நிலம் தானய்யா எங்கண்ணன் குடும்பத்துக்குக் கஞ்சி ஊத்துது? இதை நீ பிடுங்கினதுக்கப்புறம் நான் உன் கூட சுகமா இருக்க முடியும்னு நினைச்சியா? காலமெல்லாம் என்னை வளர்த்த அண்ணன் குடும்பத்து வயித்துல அடிச்சிட்டு எனக்கு ஒரு வாழ்க்கை தேவையில்லே... நீ போவலாம்..."

அம்மிணி முடித்தபோது சடமுடி ஆத்திரமும் அவமானமும் தாங்காமல் அவளைப் பார்த்துக் காலை பூமியில் ஓங்கி உதைத்தபடி திரும்பி நடந்தான்.

"அம்மிணி" என்ற சன்னாசி அவளைக் கட்டிக் கொண்டு கண் கலங்கினான். அவன் காய்ந்த விரல்களை வருடியபடி அம்மிணி தாழ்ந்த குரலில் சொன்னாள்.

அண்ணாச்சி! உங்களோட இந்தப் பிடி மண் மேல ஆசை வைக்காமல், பொண்ணு மட்டும் கேட்டு வர்றவனுக்கு என்னைக் கட்டிக் கொடுங்க... கழுத்தை நீட்டறேன்..." விசும்பினாள் அம்மிணி. படிப்பு அறிவு இல்லாத அவள் உருவம் சிறியதுதான். ஆனால் அந்த உள்ளத்தின் விஸ்வரூபத்தைத்தான் சற்று முன் காட்டிவிட்டாளே... கிருஷ்ணனுக்கு, தங்கை வித்யா பி.எஸ்ஸியின் ஐந்தரை அடி உயரம் நெஞ்சை நிறைத்துக் கொண்டு அடைக்க ஆரம்பித்தது.

## புதிதாய்ப் பிறந்தாள்

**விஜயராகவன்**

## 5

இரண்டு நாட்கள் மிகக் கனத்தோடு நகர்ந்தன.

சிரிப்பும் சந்தோஷமுமாய் இருந்த வீடு சட்டென்று இனம் புரியாத இறுக்கத்தில் ஆழ்ந்து போயிற்று.

பலராமனைப் பார்க்க, சிவாவுக்குப் பொங்கிற்று.

அம்மாவை என்ன பாடு படுத்தியிருக்கிறான்? உடம்பில் பலமும், திடமும் இருந்த போது புறக்கணித்துவிட்டு, இப்போது எல்லாம் போய் வியாதிக்கு வழி விட்டுக் கொடுத்த உடம்புடன் எதற்காக இங்கே வந்திருக்கிறான்?

இரண்டு நாட்களும் பலராமனைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

முதலில் வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்தவன், மெதுவாய் ஹாலில் பெஞ்சில் சர்வ சுவாதீனமாய் உட்கார்ந்து கொண்டதைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை.

"ஏண்டா எந்த க்ளாஸ் வாசிக்கறே?"

பலராமன் சுவாதீனமாய்க் கேட்டதும் எரித்து விடுகிற மாதிரிப் பார்த்தான்.

இதெல்லாம் என்ன மடத்தனம்? திடும்மென்று ஒருவன் வர வேண்டியது. 'உன் அப்பா' என்று சொல்ல வேண்டியது. ஏற்றுக் கொள்ள முடியுமா, என்ன?

இந்தப் பதினெட்டு வருஷங்களும் எவ்வளவு அவமானப்பட்டிருக்கிறான்?

"ஏண்டா, ஒங்கப்பா இருக்காரா போயிட்டாரா, அப்பமன்றைவது தெரியுமா...?' கருப்பா, செவப்பாடா...?"

எத்தனை கிழங்கள் அவனைச் சொற்களால் குதறியிருக்கின்றன?

"ஒன் பேருக்கு முன்னாலே 'பி'ன்னு இனிஷியல் போட்டுக்கறியே...? அதுக்கு எக்ஸ்பான்ஷனாவது தெரியுமில்லியா...?"

சொற்களைப் போல் காயப்படுத்த வேறு ஆயுதங்களே கிடையாது. கண்ணுக்குப் புலப்படாமல், உணருகிற இடமெல்லாம் ரத்தம் சொட்டச் சொட்டக் காயப்படுத்தும் வார்த்தைகள்.

இவ்வளவு நாள் சுற்றியலைந்துவிட்டு, தனியாய்த் தலையெடுக்கும் நேரத்தில் எதற்காக வரவேண்டும்? எவ்வளவு அவமானம்? எத்தனை ஏச்சுக்கள்? இந்த அம்மாவுக்கு ஏன் புத்தி இப்படிப் போகிறது?

ஒவ்வொரு வேளையும் வயிறு நிறையச் சாப்பாடு போட்டுக் கொண்டு, விதவிதமாய்ச் சமைத்துக் கொண்டு...

நறுக்கென்று நாலு வார்த்தைக் கேட்க வேண்டுமென்று நாக்குத் துடித்த போது, அதை அம்மாவிடம் சொன்ன போது, அதற்குத் தடை விதித்தாளே?

"தலையிருக்க வாலாடப்படாது... எல்லாம் எனக்குத் தெரியும். அவர்கிட்ட ஏதாவது பேசினாத் தெரியும் சேதி...! எனக்குக் கோபம் வந்ததுன்னா என்ன பண்ணுவேன் தெரியுமில்லியா...?"

குரலின் எச்சரிக்கை மிரட்டிற்று.

முன்பு ஒருநாள் அவன் ஏதோ தவறாக வாய்ப் பேசினான் என்பதற்காக ஒரு வாரம் பச்சைத் தண்ணீர் பல்லில் படாமல் உபவாசம் இருந்தாளே! மாலாவும், சிவாவும் மண்டியிட்டுக் கதறும்படியாயிற்றே!

கொதித்துப் பொங்கிய மனத்தை அடக்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தான்.

மாலாவின் நிலையும் கிட்டத்தட்ட அதே மாதிரித்தான் இருந்தது.

சுகம் இருக்கிற போது திரும்பிப் பார்க்காமல் இஷ்டப்படி இருந்துவிட்டு, பணம் எல்லாம் இழந்து மோசமான நடத்தையினால் வியாதி வந்து, கேட்பார் யாருமில்லாமல் திண்டாடும்போது தேடி வருவதற்கு மனைவி என்ன நர்ஸா? குடும்பம் என்ன ஆஸ்பத்திரியா? இதென்ன உறவு?

'அப்பா' என்று நினைக்கவே கசந்தது.

அம்மாவிடம் பேசவே பயமாயிருந்தது.

ஏதாவது கேட்டால் 'உன் வேலையைப் பார் எல்லாம் எனக்குத் தெரியும்' என்கி



றான். பல்லைக் கடித்துக் கொண்டிருந்தாள் மாலா. மிகவும் அவசியமாயிருந்தாலொழிய அம்மாவிடம் பேசுவதில்லை. காலை அலுவலகம் போகிறவரை அம்மாவுக்கு உதவியாய்க் காரியம் செய்வாள். பலராமனுக்குப் பரிமாற மறுத்தாள். 'உன் புருஷன். நீயே செய். என்னால் முடியாது' என்று சொல்லி விட்டு அலுவலகம் போய்விடுவாள்.

வீட்டின் சந்தோஷமே போய், விட்டதை இருவருமே உணர்ந்தார்கள்.

ராஜமும் ஏதோ வேலையாய் எங்கோ போவதும் வருவதுமாய் இருந்தாளே தவிர, மாலாவிடமும், சிவாவிடமும் ஒன்றும் பேசவில்லை.

எவ்வளவு சந்தோஷமாய் இருந்த வீடு! இந்த மனிதன் இருமலும், முனகலுமாய் வந்து இப்படி நாசம் செய்கிறானே!

மனத்துக்குள் குமுறிக் கொண்டிருந்தார்கள்.

மூன்றாம் நாள் காலை.

வக்கீலைப் பார்த்துப் பேசுவதற்காக ராஜம் போயிருந்தாள்.

பலராமன் கூடத்தில் ஈஸிசேரில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான்.

சிவாவுக்குப் பொறுக்க முடியவில்லை.

மாலாவை அழைத்துக் கொண்டு கிணற்றடிக்குப் போனான்.



"என்ன அநியாயம் மாலா இது...? ஐ காண்ட் ஜஸ்ட் பேர் இட்... அம்மா பண்றது கொஞ்சமும் எனக்குப் பிடிக்கல்லே.. வீட்டோட சந்தோஷத்தையே, எங்கேயோ இருந்து வந்த இது சாப்டுடுத்து... இதை ஏதாவது பண்ணியாகணும்...

கோபத்தில் வார்த்தைகள் வராமல் வெடித்தான்.

தீர்க்கமாய் ஆமோதித்தாள் மாலா.

"ஆமாண்டா சிவா... அம்மாவை இது என்ன பாடு படுத்தியிருக்கு...? அம்மா உடம்பிலே இருக்கற கழும்புகள் எல்லாம் இது அடிச்ச அடியாலே வந்த காயத்தோட நினைவுச் சின்னங்கள்... பணம் போய் ஆதரவும் போய் வியாதியை வரவழைச்சிண்டு. என்னமோ ஆஸ்பத்திரிக்கு வர மாதிரி வந்திருக்கு... அம்மாவும் என்னதையோ காணாததைக் கண்டது மாதிரி எல்லாத்தையும் மறந்துட்டு இதுக்கு வேளை தவறாமே சாதம் போடறா... 'ராஜி'ன்னு ரொம்ப உரிமையோடு அம்மா பேரைச் சொல்லி அது கூப்பிடற போது, என் அடி வயிறு என்னமாக் கொதிக்கறது தெரியுமா...? இந்த அம்மா ஏன்தான் இப்படிச் சொரணையே இல்லாமே இருக்காளோ தெரியல்லே.... இதுக்குப் பேரு பதிபக்தி இல்லே. பைத்தியக்கார பக்தி... தெய்வபக்தின்னு சொல்றோம்... பைசாச பக்தின்னு சொல்றமா...? தெய்வம் மாதிரி பதியும் இருந்தா பக்திப் பண்ண வேண்டியதுதான்... பைசாசம் மாதிரி இருந்தா வேப்பிலை அடிச்சுத்தான் வெரட்டணும்... இது கையிலே மாட்டிண்டு இத்தனை அவஸ்தைப்பட்டப்பறமும், அம்மா இதுக்கு இன்னமும் இடம் கொடுக்கறாளே... தெஜம்மா எனக்குத் தாங்கல்லேடா சிவா... இதுக்கு ஏதாவது பண்ணணும்டா..."

கண்கள் கலங்கிக் குரல் உடைய லாயிற்று.

சிவா பொங்கினான். கைகளும் மனமும் பரபரக்கக் கிணற்றடியிலேயே உலவினான்.

உள்ளே பலராமன் இருமிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. கிணற்றுக் கைப்பிடிச் சுவரில் அமர்ந்து கொண்டு ஒருகாகம் சிவா என்ன பதில் சொல்லப்போகிறான் என்று கவனிக்கிற மாதிரி அவனைப் பார்த்தது. அப்புறம் மாலாவைப் பார்த்தது.

"அம்மா எங்கேயோ ரெண்டு நாளா அடிக்கடி வெளிலே போறாளே...? எங்கே போறா...? ஏதாவது சொன்னாளா...?"

இல்லையென்று தலையசைத்தாள் மாலா.

"தெரியல்லே... என்னமோ பரபரப்பாய் இருக்கா. வக்கீல் மாமாவோட என்னமோ பேசிண்டிருந்தா. யார் யாரையோ போய்ப் பார்க்கறா. என்னமோ பண்றா... கேட்டா ஒண்ணுஞ்சொல்லமாட்டேங்கறா.. இதுக்குள்ளே ஊர்லே எல்லாருக்கும் இது வந்திருக்குன்னு தெரிஞ்சுப் போச்சு... யார் யாரோ வரா... 'யாரு பலராமனா...?

வா... ஏதோ இந்த மட்டுமாவது வரத் தோணித்தே... ராஜம் பண்ணின் புண்ணியம்... அவ பூவும் பொட்டும் நெஜம்தான்னு நீ வந்துட்டே...' அப்பமுன்னுப் பேசிட்டுப் போரு...''

அடிவயிற்றிலிருந்து குமுறினுள் மாலா.

''வக்கீல் மாமாகிட்டப் போய் நான் பேசிப் பாக்கட்டுமா...?''

வேண்டாம் என்கிற மாதிரித் தலையசைத்தான்.

''அதெல்லாம் பண்ணிடாதே... அம்மாவுக்குக் கோபம் வந்துடும். அதோட, வக்கீல் மாமாவும், மாமியும் நம்மகிட்ட ஒண்ணும் சொல்ல மாட்டார்கள்... அம்மா அதெல்லாம் ஏற்பாடு பண்ணியிருப்பாள்... ஆனு ஒண்ணு. அம்மாகிட்ட ஒரு வித்தியாசம் தெரியறது. கவனிச்சியா...? ரொம்ப சீரியஸா ஆகிப் போயிட்டாள். சுவாமிகிட்ட ரொம்ப நேரம் பிரார்த்தனை பண்ணுகிறுள். நெத்திக்குக் கண்ணிலேர்ந்து ஜலமாக் கொட்டறது. சுவாமி படத்துக்கு முன்னலே நிற்கிறுள். நான் பார்த்ததைக் கவனிச்சுட்டு சட்டுனு புடவைத் தலைப்பாலே கண்ணைத் தொடைச்சுக்கருள். 'வெங்காயம் நறுக்கிட்டுக் கண்ணைத் தொட்டுட்டேன் போல்ருக்கு. ஜலம் ஜலமா வாரது'' என்று எனக்குக் கேட்கிற மாதிரி சொல்லிக் கொண்டே போனுள்... அம்மா மனசு கொழும்பிப் போச்சுன்னு நினைக்கிறேன்... இது வந்த உடனேயே அம்மா கண்ணுல கண்ணீர்... இங்கேயே இருந்ததுன்னு, என்ன ஆகுமோ தெரியல்லே... வீடே நரகமாப் போயாச்சு...''

கொல்லையிலிருந்தபடியே வீட்டிற்குள் நோக்கியபடிக் கையை நீட்டிச் சொடுக்கினுள்.

ஒரு தீர்மானத்திற்கு வந்தவனுய் மாலாவை நிமிர்ந்து பார்த்தான் சிவா.

''இன்னும் ஒருநாள் பாக்கப்போறேன். விருந்தும் மருந்தும் மூணுநாள்... நாலாம் நாள், அம்மாவிடம் ரெண்டுலே ஒண்ணு கேட்டுடப் போறேன்...''

''எந்த ரெண்டுலே ஒண்ணு...?''

''புருஷனு, குழந்தைகளான்னு தீர்மானம் பண்ணிக்கோன்னு...''

அவன் குரலில் ஒலித்த தீவிரத்தைக் கண்டு மலைத்துப் போனுள் மாலா.

''மாலா..., சிவா... எங்கே ரெண்டுபேரையும் காணும்'' என்று கூப்பிட்டவாறே ராஜம் உள்ளே நுழைந்ததும் பின்புற வேலிப் படலை அவசர அவசரமாய்த் திறந்து கொண்டு வெளியே போனுன் சிவா.

பூச்செடிகளில் பூப்பறிக்கிற மாதிரி பாவனை செய்தாள் மாலா.

* * * * *

நான்காம் நாள் காலை பரபரப்புடன் விடிந்தது.

வழக்கத்தை விடச் சீக்கிரமாய் எழுந்து விட்ட ராஜம் வேக வேகமாய்க் காரியங்களைச் செய்தாள்.

ஒருவிதத் தவிப்பு வயிற்றில் புரள மாலாவும் சிவாவும் அம்மாவையே கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

யாரோடும் எதுவும் பேசாமல் பலராமனுக்கு உணவு பரிமாறினுள்.

இந்த மூன்று நாட்களிலேயே உடம்பு நன்ருகத் தெளிந்திருந்தான் பலராமன்.

''குழம்பிலே உப்புக் கொஞ்சம் தூக்கல்.. ரசத்துலே பெருங்காய வாசனே போருது.. என்ன பெருங்காயம் யூஸ் பண்றே...?'' என்று கேட்டுக் கொண்டே சாப்பிட்டான்.

சாப்பிட்டு முடிந்ததும் வெற்றிலைப்பாக்குப் போட்டுக் கொண்டான். ''வெத்தலைக் கொஞ்சம் முத்தல்: ஒறைக்கறது'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

''கொஞ்சம் ஜலம் கொண்டா ராஜி... வெதுவெதுன்னு குடிக்கற சூடாயிருக்கட்டும்...''

அவன் குடித்து முடிக்கும் வரை அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் ராஜம்.

மாலாவும் சிவாவும் எப்போது பேச ஆரம்பிக்கலாம் என்று காத்துக் கொண்டிருக்கிற மாதிரி நின்று கொண்டிருந்தார்கள்.

''சரி... சட்டையைப் போட்டுண்டுக் கெளம்பினுத் தேவலே...''

ராஜத்தின் குரலைக் கேட்டுத் திகைத்துத் திரும்பினுன் பலராமன். யாரைச் சொல்கிறுள் என்று புரியாமல் பார்த்தான்.

''யாரிட்ட சொல்றே ராஜி...? யாரு இருக்கா இங்கே?''

புரியாமல் கேட்டான்.

''உங்ககிட்டேதான் சொல்றேன்... சட்டையைப் போட்டுண்டு, கொண்டு வந்த பையை எடுத்துண்டுக் கெளம்பலாம்...''

பலராமன் பார்வையில் திகைப்புத் தெரிந்தது.

''எங்கே போறது...? உன்னைவிட்டா எனக்கு யார் இருக்கா...?''

எதிர்பார்த்தவள் போல் தீர்க்கமாய் அவனைப் பார்த்தாள் ராஜம்.

''சொல்றேன்...''

(தொடரும்)

''உனக்குப் பட்டுப்புடவை வாங்கக், கடைக்குப் போகலாம் வான்னு கூப்பிட்டா ஏன் வரத் தயங்கறே?''

**காற்று வாங்கப் போனேன்...**

''என்னங்க, குழாயைத் திறந்து வைச்சுட்டுக் கீழே படுத்திருக்கீங்க?''

''வெய்யில் ஒரே புழுக்கமாயிருக்கு. கொஞ்சம் காற்று வாங்கலாமேன்னு தான்!''

—ஆற்காடு எழிலன், திருச்சி.

**வெட வெட...**

''என்ன சார் இது, இவ்வளவு வெய்யிலிலும் இவர் இப்படி வெட வெடன்னு நடுங்கறார்?''



''நாளைக்கு அவர் மனைவி ஊர் திரும்பறதா தபால் வந்திருக்காம்!''

டி. வி. தங்கவேலு, நுடுப்பதி.

**அடிக்கடி மீட்டிங்**

''அந்த அரசியல்வாதி இப்பல்லாம் அடிக்கடி மீட்டிங் போடறாரே?''

''வெய்யில் ஆரம்பிச்சுடுச்சில்ல... அடிக்கடி கலர், ஜூஸ், சர்பத், சோடான்னு குடிக்கலாமேன்னுதான்!''

—பிரியா ஜெயசீலன்

**லீவு நாளிலுமா?**

''என்னமது? குடை, டிபன் பாக்ஸ், தண்ணீர் பாட்டில், புஸ்தகம் எல்லாம் எடுத்துட்டு வர்றே? இன்னிக்கு ஆபீஸ் லீவு!''

''அது தெரியாதா எனக்கு? மொட்டை மாடியில் வற்றல் போட்டிருக்கேன். சமர்த்தா காக்கா வராம பார்த்துப்பேனாம்!''

—வசந்தா வேணுகோபால், சென்னை—8

**பல்கலைக்கழகப் பரிதாபம்**

''யூனிவர்சிடி பக்கம் போனா வெய்யில் ரொம்ப அதிகமாக் கொளுத்தறது.''



''அதென்ன அங்க மட்டும்...?''

''அங்கேதானே ஏகப்பட்ட டிகிரிகள் இருக்கு!''

— ராஜம் சங்கர், கல்கத்தா.

# கோடை

**தேர்தல் வாக்குறுதி**

''என் இதயத்தின் இதயங்களுக்கு நான் சொல்லிக் கொள்வது என்னவென்றால் ...என்னைத் தேர்ந்தெடுத்தால் வெய்யில் காலத்தில் ஏழைகளும் சுகமாக இருக்க சென்னையிலேயே ஊட்டி போன்றதிலுஜிலு சீதோஷ்ண நிலை ஏற்படச் செய்வேன் என்பதைக் கூறி...''

—டி. இளமுருகன், திருச்சி.

**வரதட்சிணை பாக்கி**

''மாமா! வரதட்சிணை பாக்கி முப்பது



ரூபாய் இருக்கில்லே... அதை நீங்க கொடுக்க வேண்டாம்!''

''அப்படியா! ரொம்ப சந்தோஷம்!''

''அதுக்குப் பதிலா ஒரு ஃபிரிஜ் வாங்கிக் கொடுத்துடுங்க...!''

—ஆர். என். செழியன், டோம்பிவில்லி.

**சூடான வியாபாரம்**

''என்னப்பா வியாபாரம் இன்னும் சூடு பிடிக்கலையா?''

''அது எப்படிங்க கூல்டிரிங்க் கடையில்

வியாபாரம் சூடுபிடிக்கும்? அதுபாட்டுல ஜிலுஜிலுன்னு ஓடுதுங்க!''
—ஜி. நீலா, மன்னார்குடி.

**குடை பாக்கி**

''தயவு செய்து என்னை சந்தேகமா அப்படிப்பார்க்காதேடி...சத்தியமாசொல்றேன் இது நம்ம குடைதான் வெய்யில்ல துணியெல்லாம் பொசுங்கிப் போச்சு... இது தான் பாக்கி...!''
—வி. கீதா, எஸ். வனிதா, பொறையார்.



**வியாபார முன்னேற்றம்**

''மூணும் வருஷம் கோடையிலே வியாபாரம் நல்லா நடக்கும்னு செருப்புக்கடை வைச்சியே...?''

''கையைக் கடிச்சிடுச்சு!''

''போன வருஷம் கோடையிலே ஐஸ் வியாபாரத்தில் இறங்கினியே...?''

''முதல் கரைஞ்சுப் போச்சு!''

''இந்த வருஷம்?''

''குடை வியாபாரம் பண்ணலாம்னு பாங்கிலே கடன் கேட்டேன்; கையை விரிச்சுட்டாங்க!''
—எஸ். ராமநாதன், திருநெல்வேலி.

**குளுகுளு டைரக்டர்**

''வெய்யிலைப் பற்றி கவலைப்படாத டைரக்டரா? யாருப்பா அது?''

''ஏ. வி. திருலோகசந்தர்!''
—விருதை ராஜா, விருதுநகர்.



**பவர் கட்**

''ஆபீஸிலே பவர்கட்டுன்னு வீட்டுக்கு வந்தது தப்பாப் போச்சு; பெண்டாட்டி வடாம் பிழிய வைச்சுட்டா, என்னே!''

''அப்ப உங்களுக்கு ஆபீஸிலும் பவர்கட் வீட்டிலேயும் பவர் கட்டுன்னு சொல்லுங்க!''
—எம். பாஸ்கர், சென்னை—88.

**வாசகர் பங்கு**

**சூடான பேச்சு!**

''அம்பி! ஏன் உன் அக்கா எப்பவுமே சூடா பேசறு?''

''அவ பேரே சூரியாதானே!''
—சிவசக்தி, நாகப்பட்டினம்.

**என்ன அவசரம்?**

''சாஸ்திரிகளே இதுக்குத்தான் முகூர்த்தத்துக்கு இவ்வளவு முன்னாடியே, எல்லாருக்கும் அட்சதையைக் கொடுக்காதீங்கன்னேன்!''



''ஏன் என்ன ஆச்சு?''

''அடிக்கிற அனலில் அவரவர் கையில் வைத்திருக்கிற அட்சதையெல்லாம் சாதமா மாறிடிச்சு!''
—சம்பத்குமாரி, திருச்சி.

**முகத்தில் அடித்தால்...**

''முதுகில் அடித்தால் தாங்கிக்கலாம். முகத்தில் அடித்தால் எப்படிங்க தாங்கிக்கிறது?''

''அடடா! யார் உங்களை அடிச்சது?''
''வெய்யில்தான்!''

—கோ. முருகன், பாண்டிச்சேரி.

**தண்ணியில்லாக் காட்டுக்கு...**

''உனக்குத் தண்ணியில்லாக் காட்டுக்கு டிரான்ஸ்ஃபர் வேணுமா? எதுக்குப்பா?''

''கோடை விடுமுறையைச் சாக்கிட்டு வரும் உறவினர்கள் படையெடுப்பைத் தாங்க முடியலே ஸார்!''

—கோ. முருகன், பாண்டிச்சேரி.

வந்தவர் (மறதியாக): ''அக்னி நக்ஷத்திரத்துக்கு...''

—தை யு. ராமமூர்த்தி, சென்னை—40.

**வட்டப் பரிசு**

''தலைவரே! நம்ம கட்சியின் எட்டாவது வட்டத் தொண்டர்கள் இந்தக் கோடைக்கு ஏற்ற பொருளை உங்களுக்குப் பரிசளிக்கப் போறாங்க!''

''பலே! பலே! ஃபிரிட்ஜா?''







**தேன் நிலவு**

''ஐஸ் கம்பெனி வைச்சிருக்கிறவர் மகளைக் கல்யாணம் செய்துகிட்டது தப்பாய்ப் போச்சு! தேன்நிலவுக்குக் குளிர்ப் பிரதேசம்னு ஆரம்பிச்சதுமே நம்ம ஐஸ் பாக்டரியிலேயே வைச்சுக்கலாம்னு சொல்லிட்டார்!''

—பொ. மாரிமுத்துக்குமார், திருச்சி.

**அர்ச்சனை அவருக்கு**

குருக்கள் : ''சார் எந்த நக்ஷத்திரத்துக்கு அர்ச்சனை பண்ணனும்?''

''இல்லே கைவிசிறி!''

—சே. பட்டு, கும்பகோணம்.

---

ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப்பெறும் அதிர்ஷ்டசாலி:

டி. இளமுருகன்,
215, வேதாசலம் தெரு,
கருணாநிதி நகர், திருச்சி—21.

---



கற்பனை பல சிறகடிக்க
இளமை ஊஞ்சலாடும் அழகி.
அவள் நெஞ்சைக் கவர்ந்தவை பல.
மெல்லத் தவழ்ந்து செல்லும் நீரோடை.
செல்லமாக வீசும் தென்றல்.
உள்ளம் கவர்ந்த கட்டழகன்.
கொள்ளை அழகு மலர்கள்.
பளபளப்பான நீண்ட கூந்தல்.
அக்கூந்தலுக்கு
வி.வி.டி.தேங்காய் எண்ணெய்...




**வி.வி.டி. தேங்காய் எண்ணெய்**

இயற்கைக் கூந்தலின் இளமை ரகசியம்







EP-VVD-6/84

## 12

கடந்த சில தினங்களாக வசுமதி ஒரு இயந்திரமாக இயங்கி வருவதை அவளுடைய தந்தை சதாசிவமும், தாயார் சாரதாவும் எளிதில் புரிந்து கொண்டார்கள். போன வாரம் வரையில் தினமும் இரண்டு மூன்று தடவைகளாவது அரவிந்தனைப் பற்றிப் பேசும் அவள் இப்போது வீட்டிலேயே தேவைக்கு அதிகமாக ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. காலையில் ஸீனியர் வீட்டுக்குப் போய் ஒன்பதரை மணி அளவில் திரும்பிப் பறக்கப் பறக்க அள்ளிப் போட்டபின் எக்ஸ்பிரஸ் பஸ்ஸிலோ அல்லது சக அட்வகேட் ஒருவருடைய காரிலோ ஹைகோர்ட்டுக்கு ஓடுவாள். சாயங்காலம் சில நாட்கள் மட்டுமே ஸீனியருடைய ஆபீஸுக்கு மீண்டும் செல்வாள்.

இப்போது அவளுடைய தினசரி அட்டவணையே மாறிவிட்டது. காலையில் ஐந்து மணிக்கே எழுந்து உடனடியாகக் குளித்து, பேப்பரைக் கண்ணோட்டமாகப் பார்த்து ஒரு வாய் காப்பி குடித்து விட்டு ஆறு மணிக்கு ஸீனியர் வீட்டுக்கு விரைகிறாள். அதன் பிறகு மாலையில் இஷ்டப்படி திரும்புகிறாள்.

மாலை வேளைகளில் வீடு திரும்புவதில்லை. சில நாட்கள் வரும்போது மணி பத்து கூட ஆகிறது. இரவு உணவிலும் நாட்டம் இல்லை.

ஏன்?

வசுமதிக்கு என்ன வாயிற்று?

அன்று ஞாயிற்றுக்கிழமை.

வழக்கம் போல வசுமதி ஆறுமணிக்குப் புறப்பட்டாள்.

"கொஞ்சம் இருடி, வசு."

அம்மா சாரதா அவள்முன் நின்றாள்.

தாயாரை ஏறிட்டுப் பார்க்காத வசுமதி செருப்பை மாட்டிக் கொண்டாள்.

"உங்கிட்டத்தான் சொல்றேன். கொஞ்சம் இரு."

"என்ன வேணும்?" இடது கால் செருப்பு மக்கர் செய்தது. கால் நினைத்தபடி நுழையவில்லை.

"உனக்கு என்னாச்சு?"

"யாருக்கும் ஒண்ணும் ஆகலை."

"இதை யாராவது ஒரு செவிடனைப் பார்த்துச் சொல்லு!" என்றாள் சாரதா.

"நான் இப்பப் போறேன்... உனக்கு என்ன பேசணுமோ அதை அப்புறமாப் பேசு!" வசுமதி நகர்ந்தாள்.

"வசு!"

அப்பா சதாசிவம் இப்போது அருகே வந்தார்.

"இன்னிக்கு ஸண்டே!" என்றார் அவர்.

"தெரியும்."

"வழக்கமா நீ இன்னிக்கு எல்லாக் காரியங்களையும் சாவகாசமாச் செய்வே. உன் புடவைகளையெல்லாம் தோய்ச்சு, கஞ்சி போடுவே... ஆயில் பாத் எடுத்துப்பே..."

"எல்லாம் வந்து பார்த்துக்கறேன்..."

"போன ஞாயிற்றுக்கிழமை நீ எதையும் வந்து பார்த்துக்கலை... கற்பகம் உன் புடவைகளைத் தோய்ச்சா." என்றார் அப்பா.

சாரதா இன்னும் ஒருபடி மேலேபோனாள்

"உன் புடவையை ஒருத்தி தோய்ச்சா. உன் எண்ணெய்க் குளியலை இன்னொருத்தி செய்ய முடியாது."

"இப்ப என்ன வேணும்?"

"உன் ஸீனியர் வீட்டுக்கு நீ இன்னிக்குப் போகவேண்டாம்." என்றார் சதாசிவமும்.

"வீட்டிலே சாப்பிட்டுச் சரியா அஞ்சு நாளாறது. ஸீனியர் உனக்கு இலை போட்டு விருந்து வைக்கிறாரா தினமும்... அப்புறம் ராத்திரியும் லேட்டா வர்றே... எங்கே டிபன் சாப்பிடறே? எங்கே ராத்திரி சாப்பிடறே? கேட்டா சுவரைக் கோட்டானைப் பார்த்துட்டு ஒரு புஸ்தகத்தை எடுத்துட்டுப் பால்கனிக்குப் போறே!"

சாரதா நிறுத்தியதும் சதாசிவம் விட்ட இடத்திலிருந்து ஆரம்பித்தார்.

"இப்படி வல்லாம் அந்த – அவன் பேரென்ன... ஹங்... அரவிந்தனோட நினைமுமே உனர் சுத்தறியா?"

"வேறே எவன் இவளைக் கொண்டாடுவான்?" என்ற சாரதா, "ஏண்டி உன் மனசிலே நீ என்னதான் திட்டம் போட்டுவைச்சிருக்கே?" என்று கேட்டாள்.

வசுமதி பதில் பேசவில்லை. தன்னைச் சுற்றி இப்போது அப்பாவும் அம்மாவும் மட்டுமில்லாமல் சீதா, கற்பகமும், தம்பி, தங்கையும் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்தாள்.

ஒரு நிமிட மௌனத்துக்குப் பிறகு அவள் பேசினாள். குரலில் அவர்கள் இதுவரை உணர்ந்தறியாத உறுதி தொனித்தது.

"நீங்க எல்லாரும் இப்படி அநாவசியமா என் விஷயத்திலே தலையிட்டீங்கன்னா, நான் லேடீஸ் ஹாஸ்டலுக்குப் போயிடுவேன்

# ஆகாச

இது நிச்சயம்... எனக்குக் கிடைக்கிற வரும்படி இனிமே இந்த வீட்டுக்கு வராது. ஹாஸ்டலுக்குப் போயிடும்! சம்மதமா?"

சதாசிவத்துக்குக் காலையிலிருந்தே ஒற்றைத் தலைவலி. ஒற்றைத் தலைவலி வந்தால் மௌனமாக ஒரு மூலையில் உட்கார வேண்டும். ஆனால் அவரால் அது மட்டும் முடியாது. கோபம் தலையின் இன்னொரு ஓரத்தில் வந்து உட்கார்ந்துவிடும்.

"என்னடி சொன்னே? லேடீஸ் ஹாஸ்டலுக்குப் போயிடுவியா? போயேன்... உன் வரும்படியிலே தான் நாங்க இங்கே கொட்டிக்கறோம்ங்கற நினைப்பா உனக்கு? உன் ஸீனியர் அப்படி என்னடி அள்ளிக் கொடுக்



# கங்கை

கிறான் ... கட்சிக்காரர்கள் தலையிலே ஐஸ் வைச்சு ஐஸ் வைச்சுக் கறக்கற பணத்திலே பிசாத்து ஆயிரத்தை உன்கிட்டே வீசறான் ... நீயும் அதைப் பொறுக்கி எடுத்துண்டு வர்றே... போடி, லேடீஸ் ஹாஸ்டலுக்குப் போறதுன்னு இன்னிக்கே போ ...ஞாயிற்றுக்கிழமை. அமாவாசை. நிறைஞ்ச நாள் ...''

''நீங்க கொஞ்சம் பேசாம இருங்கோ ... ஏண்டி வசு, யார்ட்டே என்ன பேசறோம்ங்கற பிரக்ஞையோடதான் பேசறியா இல்லே உனக்கு பைத்தியம் பிடிச்சுடுத்தா?'' என்றாள் சாரதா.

சீதாவும், கற்பகமும் மற்றவர்களும் வேடிக்கைபார்த்தார்களேதவிரவாய்திறக்கவில்லை.

வசுமதி அம்மாவையும் அப்பாவையும் மாறிமாறிப் பார்த்தாள். பிறகு ஒருமுடிவை உறுதியாக எடுத்துக் கொண்டு பேசினாள்.

''ஓ.கே ...ரொம்ப சந்தோஷம். அப்பா. நீங்க நான் பார்த்துச் சொல்லிட்டேன் ... அம்மா நீ என்னைப் பைத்தியக்காரிங்கற முடிவுக்கு வந்துட்டே! இனிமே நான் இங்கே இருக்கமாட்டேன் ... பன்னண்டு மணிக்கு நான் திரும்பி வந்து என் பெட்டியோட இறங்கறேன் ...''

''ஏண்டி, குடும்ப மானம் குலையணும்னு முடிவுக்கு வந்துட்டியா?''

சதாசிவத்துக்கு தலைவலி அதிகமாக, கோபமும், ஆத்திரமும் பன்மடங்காகின.

''டீ சாரதா, ஏண்டீ, போறவளை நிறுத்தறே? ரேஷன் கார்ட்லே ஒரு ஆள் குறையறது ... போகட்டும். இவ, போகட்டும் ... அந்தத் தடிப்பயல் அரவிந்தன் இருக்கானே




கவாஸ்கரிடம் ஒரு மூட நம்பிக்கை உண்டு. ஒரு பேட்ஸ்மென் 90—க்குமேல் ரன்கள் எடுத்து ஆடிக் கொண்டிருக்கும் போது அவர் வெளியே வந்து பார்க்க மாட்டார். டீ.வி.யில்தான் ஆட்டத்தைப் பார்ப்பார்.

ஆதாரம்: சொஸைட்டி தகவல்:ரகுராம்

அந்தத் திமிரிலேயும் தைரியத்திலேயும் தானே இவ இப்படி நம்ப தோளுக்கு மேலே உசந்து போய்ப் பேசறு?உ. வசு! இங்கிருந்து இறங்கிப் போனே, அப்புறம் மறுபடியும் இந்த வீட்டுப் படியிலே நீ கால் வைக்க மாட்டே ...உன் காலே நானே ஒடிப்பேன்.."

மறுகணம் வசுமதி வேகமாக நகர்ந்து, அம்மாவையும் தாண்டிக் கொண்டு நடந்தாள்.

* * * * *

வசுமதி வெளியே வந்தாள். தான் தன் பெற்றோரிடம் நடந்து கொண்ட முறை சரியல்ல என்பதை அவளே உணர்ந்தாள். தன் மனத்துக்குள் ஒரு வெறுப்பு உதயமாகி அசுர வேகத்தில் வளர்ந்து, எதைக் கண்டாலும் ஒரு எரிச்சலையும், பிறர் மீது ஆத்திரத்தையும் ஏற்படுத்துகிறது.

ஏன்?

அவள் சிந்தனை சரிவர சீராக வரவில்லை என்றாலும், ஒன்றைமட்டும் அவளால் உணர முடிந்தது. என்னதான் ஒரு பெரிய தியாக மனப்பான்மையுடன் அவள் அரவிந்தனுக்கு வழிவிட்டு ஒதுங்கிக் கொண்டாலும் அவளால் அவனை மறக்க முடியவில்லை. இனி அவள் நிச்சயமாக வேறு எந்த ஆண் மகனை நினைத்தும் பார்க்கப்போவதில்லை. திருமண வாழ்க்கையிலும் ஈடுபடப் போவதில்லை. கடைசி மூச்சுவரை அவளுடைய இதயத்தில் கிடைக்காத அரவிந்தன்தான் இருப்பான்.

அன்று அவனுடன் பேசி, தன் முடிவைப் பிரகடனப்படுத்திய போது, உலகில் தான் ஒரு பெரிய சாதனையை நிகழ்த்திவிட்டதாக உள்ளூரப் பூரித்துப் போயிருந்தாள். ஆனால் இன்று அதை நினைத்துப் பார்த்தபோது தான் எவ்வளவு பெரிய முட்டாளாக இருந்துவிட்டோம் என்று தோன்றியது. அவனுடைய ஸீனியர் என்ன அறிவுரை வழங்கினால் என்ன? வசுமதி தன் இஷ்டப்படிதானே செயல்பட வேண்டும்? தாரக்ராம் கோபக்காரராக இருந்தால் அவளுக்கு என்ன. அவருடைய பெண்ணுக்கு மனபலவீனம் இருந்தால் அவளுக்கு என்ன? அவள் அரவிந்தனை மனசார நேசித்திருக்கிறாள். அவனும் அவளுக்காக எத்தனை ஆண்டுகள் வேண்டுமானாலும் காத்திருக்கத் தயார் என்று கூறியிருக்கிறான். நிலைமை இப்படி இருக்கும் போது அவள் எதற்காக, பெரிதாகத் தியாகம் செய்பவளைப் போல நடந்து கொண்டிருக்க வேண்டும்? இதனால் யாருக்கு என்ன லாபம்? அவளுடைய தியாகத்தைப் பாராட்டி மாநில அரசும் மத்திய அரசும் ஏதாவது பரிசு வழங்கப்போகிறார்களா? அவளுடைய பெயருடன் போட்டோவும் எல்லாப் பத்திரிகைகளிலும் வெளியாகப் போகின்றனவா?

யதார்த்த உலகில் அவள் யதார்த்தவாதியாக இருந்தால் தானே நினைத்த காரியங்களில் வெற்றியையும் மகிழ்ச்சியையும் காண முடியும்? இலட்சியம் என்ன வேண்டியிருக்கிறது லட்சியம்?

அவள் ஒரு படித்த முட்டாள். அரவிந்தனைப் போன்ற ஒரு விலை மதிக்க முடியாத மாணிக்கத்தை உள்ளங்கையில் வைத்துப் பத்திரப்படுத்தி அனுபவிக்காமல், பெரிய தானம் செய்வதாகப் பூரித்துப் போய் அள்ளிக் கொடுத்துவிட்டாள்!

அவளைப் போன்ற ஒரு பைத்தியம் வேறு எங்கும் பிறக்க முடியாது!

* * * * *

"என்னம்மா, வசு, உன் முகம் என்ன இப்படி கோரமா இருக்கு? உடம்பு கிடம்பு சரியில்லையா?" என்று கேட்டார் கே. ஜி. கே.

"ஐ'ம் ஆல்ரைட்..."

"நாலஞ்சு நாளாவே நீ சரியில்லே ..."

"அதெல்லாம் ஒண்ணுமில்லே சார்.." என்றாள் வசுமதி.

"உன் முடிவு உன்னே ரொம்பப் பாதிச்சிருக்குன்னு எனக்குத் தெளிவாத் தெரியிறது....

"அதெல்லாம் ஒண்ணும் இல்லே."

"நீ பூசி மெழுகினா எப்படி ...? இந்தா இதை எல்லாம் ஒருதடவை படிச்சுப் பாரு... எல்லாம் நீ எழுதின பாயிண்ட்களும் நீ எடுத்துக் காட்டியிருக்கிற மேற்கோள்களும்."

"ஏன் சார் தப்பு இருக்கா?"

"இருக்கான்னு கேட்கிறே? ஏதாவது ஒண்ணு கரெக்டா இருக்கான்னு லென்ஸை வைச்சுப் பாரு!"

"ஸாரி, சார்..."

"வசு!"

"யெஸ் சார்..."

"என்னே மன்னிச்சுடு, வசு!"

"எதுக்கு சார்?"

"நான் உன் சொந்த வாழ்க்கையில் குறுக்கிட்டுப் பாழாக்கிட்டேன்.

"நான் உங்க அட்வைஸாலே எதையும்

டிஸைட் பண்ணலே...''

''அரவிந்தனை நீ எப்பக் கடைசியா பார்த்தே?''

''லீகல் மேட்டர்ஸ் ஏதாவது இருந்தா பேசலாம் சார்...''

''ஓ. அரவிந்தனைப் பற்றி நான் மூச்சுக் கூட விடக் கூடாதா?''

வசுமதி பதில் பேசவில்லை. அரவிந்தனுடன் பழகிக் கொண்டிருந்த நாட்களில் அவளுக்கு எல்லாவற்றிலும் தனி உற்சாகம் கொப்புளித்துக் கொண்டிருந்தது. அவன் இல்லை என்றநிலை பிறந்த உடனேயே அவனையும் அறியாமல் அவள் தன்னையே இழந்து போயிருக்கிறாள். செய்யும் தொழிலில் கவனம் இல்லை. உட்கொள்ளும் உணவில் ருசி இல்லை. பேசும் பேச்சில் உயிர் இல்லை.

''வசு. நீ கெட்டிக்காரி. நல்ல சிறந்த லாயரா பரிமளிக்கப் போறவ... அற்ப விஷயங்களெல்லாம் உன் மனசைப் பாதிக்க நீ இடம் கொடுக்கக் கூடாது!''

வசு தனக்குள் நொந்து கொண்டாள். புனிதமான காதல் ஒரு அற்ப விஷயமா? அவளுடைய நாளங்களிலெல்லாம் பரவிக் கொண்டு இன்னும் சிந்தையை அலைக்கழிக்கும் அரவிந்தன் ஒரு அற்ப விஷயமா?

அவள் நகர்ந்தாள்.

''நேத்து ராத்திரி தாரக்ராம் போன் பண்ணினார்.''

வசுமதி மேலும் ஒரு அடி நகர்ந்தாள்.

''எனக்கும் உனக்கும் ஆயிரம் தாங்க்ஸ் சொன்னார்.''

''நோ மென்ஷன்னு சொல்லிடுங்க. சார்.''

''அரவிந்தன் அவர் பெண்ணைப் பார்த்தாச்சாம். மூந்தா நாள் மெட்ராஸ் திரும்பி வந்தாச்சாம்.''

''தாங்க்ஸ் ஃபார் தி இன்ஃபர்மேஷன் சார்.''

அவளுடைய குரலிலிருந்தே அவள் வெறுப்பை உமிழ்கிறாள் என்பதை கே.ஜி.கே. புரிந்து கொண்டார்.

''நீ உண்மையாகவே அரவிந்தனுக்குக் கிடைச்சிருக்கிற இந்தப் பெரிய வாய்ப்பை நினைச்சு சந்தோஷப்படற பெண்ணாக இருந்தால், நல்ல பண்புடைய பெண்ணாயிருந்தால், அரவிந்தனைச் சந்திச்சு அவனை கங்க்ராஜுலேட் பண்ணணும்.''

அவள் அவருடைய அறையை விட்டு வெளியேறினாள்...

படி தாண்டுகையில் நின்றாள். அவரைப் பார்த்தாள்.

''நான் பண்புடைய ஒரு பெண். இல்லை சார்!''

கே. ஜி. கே. வுக்கு அவள் மீது பரிவும் பரிதாபமும் இரக்கமும்தான் உண்டாயிற்று. ஆனால் தாரக்ராம் என்ற ஒரு தங்கச் சுரங்கத்தை, கேவலம் ஒரு பெண்ணுடைய காதல் வெற்றிக்காக அவர் தியாகம் செய்ய விரும்பவில்லை. ஒரு ஜூனியர் வக்கீலை இழந்தால் ஆயிரம் ஜூனியர்கள் கிடைப்பார்கள்.

ஒரு தாரக்ராமைப் போல இன்னொரு தாரக்ராம் கிடைப்பது குதிரைக் கொம்பு.

அவர் கேஸ் கட்டுகளில் மூழ்கலானார்.

(தொடரும்)

# ஆம்னி

## சுகன்யா

விஞ்ஞானி ராம்ஜியின் முகத்தில் எல்லையற்ற மகிழ்ச்சி. 'வெற்றி, வெற்றி'— துள்ளிக் குதித்துவிட்டார். "கண்டுபிடித்து விட்டேன், உருவாக்கி விட்டேன்."—அவர் போட்ட சத்தத்தில் கீழே இருந்த குடும்பத்தவர்களும், அசிஸ்டெண்டுகளும் ஓடி வந்தனர்.

ஆம், அவர் அந்த இயந்திர மனிதனை உருவாக்கிவிட்டார். பல்வேறு வருடங்களாக நம் நாட்டில் இருக்கும் ஊழலையும், அராஜகத்தையும் ஒழிக்க அல்லும் பகலும் ஆராய்ச்சி செய்து, அந்த இயந்திர மனிதனை உருவாக்கி விட்டார்.

அடுத்தநாள், ஆராய்ச்சிக் கூடத்தில், அந்த இயந்திர மனிதன் ஊர்ப் பெரிய மனிதர்கள், ஆராய்ச்சி மாணவர்களுக்கு அறிமுகம்செய்துவைக்கப்பட்டான். விஞ்ஞானி ராம்ஜி, முகத்தில் பெருமிதத்துடன் உரை நிகழ்த்தினார்.

'ஜென்டில்மேன் அண்ட் லேடீஸ், என்னுடைய புதிய கண்டுபிடிப்பான, இந்த செல்லப்பிள்ளை, ரோபாட்டை உங்களுக்கு அறிமுகப்படுத்துவதில் பெருமை அடைகிறேன்.

உங்களுக்குத் தெரியும். சுதந்திரம் அடைந்தபின், நம் பாரத நாட்டில் ஊழல் பெருமளவில் பெருகிவிட்டது. எங்கு பார்த்தாலும் ஊழல். யாராலும் ஊழலை ஒழிக்க முடியவில்லை. நேர்மையான அதிகாரிகளும் கடமைகளைச் செய்ய முடிவதில்லை. ஏகப்பட்ட அச்சுறுத்தல்கள். ஆசைகள். இதற்கெல்லாம் காரணம் என்ன? அவர்களுக்கு இதயம் என்று ஒன்றிருக்கிறது. குடும்பம் என்று ஒன்றிருக்கிறது. எப்படிப்பட்ட நேர்மையாளனும் குடும்பம், சொந்த வாழ்வு என்று வரும் போது நிலை தடுமாறுகிறான் சபலத்துக்கு ஆளாகிறான்.

எனவே ஊழலை ஒழிக்க, ஒரு இதயமே இல்லாத மனிதனால்தான் முடியும். அவனை யாராலும் சபலத்துக்கு உள்ளாக்க முடியாது. அவனை அழிக்கவும் முடியாது. அடி உதைகளும் அவனை ஒன்றும் செய்யாது.. அப்படிப்பட்ட இயந்திர மனிதன் இவன்.."

அனைவர் கண்களும் அந்த இயந்திர மனிதன் மேல் திரும்பின.

"இவன் பெயர் ஆம்னி." ராம்ஜி தொடர்ந்தார். "ஆம்னி என்றால் என்ன அர்த்தம்? இவன் எங்கும் இருப்பான். எப்போதும் இருப்பான். ஊழல் புரிந்தவர்களுக்கு அங்கேயே தண்டனை கொடுப்பான். இவனிடம் உள்ள ரகசிய அமைப்புக்கள் மூலம் உடனே போலீசுக்கும் தகவல் செல்லும். 'சம்பவாமி யுகே யுகே' என்று பகவான் சொன்னார். ஊழல் எங்கெங்கு நடக்கிறதோ அங்கெல்லாம் இவன் இருப்பான். இனி இந்த நாட்டில் ஊழலே இருக்காது. ஆம்னி... ஸ்டார்ட்."

இயந்திர மனிதன், அதாவது ஆம்னி, மெல்ல நகர்ந்தான். கூட்டம் கலைந்தது.

'ஆம்னி' பகலென்றும் இரவென்றும் பாராமல், நகர் முழுவதும் அலைந்தான். அவனைப் பார்த்தாலே, குற்றவாளிகள் ஓட ஆரம்பித்தனர். அலுவலகங்களில் லஞ்சம் வாங்கப் பயப்பட்டனர். அவன், ஊர் ஊராகச் செல்ல ஆரம்பித்தான்.

விஞ்ஞானி ராம்ஜிக்குத் தகவல்கள் வந்து கொண்டே இருந்தன. "ஆம்னி ஒரு பிக்பாக்கெட் கேங்கைப் பிடித்துக் கொடுத்தான். பஸ் கொள்ளையரைப் பிடித்தான். லஞ்சம் வாங்கிய அதிகாரியைப் பற்றிப் போலீசுக்குத் தகவல் கொடுத்தான். "பல்வேறு செய்திகள் வந்தன.

விஞ்ஞானி ராம்ஜிக்கு ஜனாதிபதியின் விசேஷ கௌரவப் பரிசு கிடைத்தது. பல நாடுகளில் இருந்து அவருக்கு விருதுகளும், விசேஷ அழைப்புக்களும் வந்தன.

மூன்று மாதங்கள் ஓடின.

லஞ்சம், ஊழல் போன்றவை கிட்டத்தட்ட ஒழிந்துவிட்டன என்றே கூறலாம்.

அப்போது ஒருநாள்...

* * * * *

ஊர்ப் பெரிய புள்ளிகளின் மாநாடு. மிகவும் ரகசியமாக, அந்த மாளிகையில் நடந்து கொண்டிருந்தது. சாப்பாடு. டிரிங்க்ஸ் என்று முடிந்ததன் பிறகும், அனைவரின் முகத்திலும் சோகம்.

ஊர்ப் பெரிய மனிதர் தனபாலன் பேச ஆரம்பித்தார்.

"நண்பர்களே, பேசுவதற்கே பயமாக இருக்கிறது. எல்லோர் முகத்திலும் ஒரு சோகம். தீவிர சிந்தனை. நம்முடைய இலக்கு ஒருவன்தான். அது யாரென்று உங்களுக்கே தெரியும். ஆம்னி."

பேசியவர் திடீரெனப் பேச்சை நிறுத்தினார். எங்கு ஊழல் நடந்தாலும் அங்கே ஆம்னி வந்துவிடுவான் என்பது தெரிந்ததே. எனவே கூறினார். "ஆம்னி வாழ்க" என்றார். பேச்சை மாற்றினார். "ஆம்னியின் சேவை, நாம் எல்லோரும் அறிந்ததே. ஆம்னி நீடூழி வாழ்க" என்றார். அமர்ந்துவிட்டார்.

ஒரு உயர் அதிகாரி எழுந்தார். "யாரும் பயப்படத் தேவையில்லை. ஊழல் நடந்தால்தான், அல்லது ஒரு குற்றம் நடந்து முடிந்தால்தான் ஆம்னியால் பிடிக்க முடியும். குற்றம் நடக்கும் முன் தடுத்துநிறுத்த அவனுக்குச் சக்தி இல்லை. எனவே நாம் தைரியமாகப் பேசலாம். எது வேண்டுமானு

னும் பேசலாம். பயப்படாதீர்கள்'' அதிகாரிகளுக்கே உரித்தான தோரணையில் அவர் பேசினார்.

''ஆம்னி ஒழிக.'' சிறிதுநேரத் தயக்கத்துக்குப் பின். அனைவரும் கூவினர். ''ஆம்னி ஒழிக.''

ஐந்து நிமிடம் அமைதி. ஆம்னி வரவில்லை. ''பார்த்தீர்களா? நான் சொன்னேன் இல்லையா. இதே நேரத்தில் நாம் ஏதாவது ஒரு தப்பு செய்திருந்தால் இந்நேரம் ஆம்னி இங்கே இருந்திருப்பான்.

சொல்லி வாய் மூடவில்லை. கூட்டத்தில் ஒரு சலசலப்பு. எல்லோரும் எழுந்து பார்த்தனர். ஆம்னி அமைதியாக வந்து கொண்டிருந்தான். அமைதியாக ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

''தவறு எங்கெல்லாம் நடக்கிறதோ, அங்கெல்லாம் அவன் இருப்பான்'' விஞ்ஞானி ராம்ஜியின் உரை. அனைவர் நினைவுக்கும் வந்தது. அதற்குமேல் பேச யாருக்கும் தைரியமில்லை. கூட்டம் கலைந்தது.

அனைவரும் சென்றனர்.

தனபால் மட்டும் தன்னுடைய தீவிர சிந்தனையிலிருந்து திரும்பவில்லை. தன்னுடைய வாழ்க்கையில் எவ்வளவு பேர்களைச் சந்தித்திருப்பார் அவர். இரும்பு இதயம் கொண்டவர்கள் என்று சொன்ன எவ்வளவோ அதிகாரிகளையே அவர் வளைத்திருக்கிறாரே. கேவலம் இதயமே இல்லாத ஒரு இயந்திர மனிதனையா அவரால் ஜெயிக்க முடியாது?

ராத்திரி முழுக்க யோசித்த அவர், இறுதியில் ஒருதிட்டத்துடன் படுக்கைக்குச் சென்றார்.

அடுத்த நாள் முதல் அவர் அடிக்கடி. விஞ்ஞானி ராம்ஜியின் வீட்டுக்குச் செல்ல ஆரம்பித்தார். விஞ்ஞான விஷயங்களைப் பற்றிய சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள ஆரம்பித்தார். விஞ்ஞானி ராம்ஜியைப் பாராட்டி, கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்தார். பாராட்டுக் கூட்டங்கள் என்று போடாமல் ''விஞ்ஞான விளக்கக் கூட்டங்கள்'' என்று போடச் செய்தார். டில்லி, கல்கத்தா என்று பலநகர்களில் இருந்து அழைப்புக்கள் வரச் செய்தார். ரயில், விமானம் எல்லாவற்றிலும் ராம்ஜியுடனேயே பயணம் செய்தார்.





## அடுத்த இதழில்

* புன்னகை அரசி மேல்நாட்டில் பிறந்திருந்தால் அவரது புன்னகை பத்து லட்சம் டாலருக்கு இன்ஷூர் செய்யப்பட்டிருக்கும்...! இங்கே?

* அந்தப் புன்னகை எத்தனை கவிதைகளுக்குக் காரணமாயிற்று?

* அவரது இளமைத் தோற்றத்தின் ரகசியம் என்ன?

* நடிப்புத் திறனின் இலக்கணம் என்ன?

* திரை உலகிலும் வாழ்க்கையிலும் பல லட்சங்களைக் கண்ட அவர் லட்சியங்களை அடைந்து விட்டாரா?

## கே.ஆர். விஜயா

### வண்ணப் படம் — பேட்டி

விளக்கக் கூட்டங்களுக்கான "பீசை"த் தன் பெயருக்கு வரவழைத்தார். செலவுக்குக் கச்சிதமாகக் கணக்குக் காட்டி மீதியைக் கொடுத்தார்.

ஆம்னியால் ஒன்றும் செய்ய முடியவில்லை. பைசா கூட ஊழல் இல்லை. தன் எஜமானரை, 'தனபாலனுடன் சேராதே' என்று சொல்லும் சக்தி அவனுக்கில்லை.

நடப்பவைகளை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருக்கத்தான் முடிந்தது.

ஒருநாள், டில்லிக்கு, தமிழ்நாடு எக்ஸ்பிரசில் முதல் வகுப்பில் செல்லும்போது மெல்ல ஆரம்பித்தார் தனபாலன். "அருமையான பாரின் விஸ்கி" என்று டம்ளரில் ஊற்றும் போது, ராம்ஜியின் மனம் மாறிற்று. "நானும் சேர்ந்து கொள்கிறேனே" என்றார்.

"அப்பா, பாட்டிலுக்கான பணத்தைக் கொடுத்து விட்டு, என்னோடு சேர். இல்லாவிட்டால் 'ஆம்னி' என்னைக் கொன்றுவிடுவான்" என்று தனபால் கூறினார்.

சிரித்தபடி ஐம்பது ரூபாயைக் கொடுத்து விட்டுப் பாட்டிலைக் கையிலெடுத்தார் ராம்ஜி.

'ஆம்னி' அடுத்த அறையில் இருந்தான்.

ராம்ஜி மெல்ல குடியின் அடிமையானார். "கடன் சொல்லிவிட்டுக் குடிப்பது ஊழல் இல்லையே. என் கணக்கில் எழுதிக்கொள்" என்று சொல்லிவிட்டுக் குடிக்க ஆரம்பித்தார்.

அதை வைத்தே ஆம்னியையும், அவரையும் ஒழிக்கத் திட்டமிட்டார் தனபாலன். எஜமான் குடிக்கும் போதெல்லாம் ஆம்னி அருகில் இருந்து பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் எதிரிலே தனபாலன், கணக்கைச் சரியாக வைத்திருந்தார்.

அதே நேரத்தில் ஆம்னியின் சக்தி, சிறிது சிறிதாகக் குறைய ஆரம்பித்தது. எஜமானனையே கண்காணித்துக் கொண்டிருந்ததால் மற்ற இடங்களுக்கு அவனால் செல்ல முடியவில்லை. அதுவும் ஒருவகையில் தனபாலனுக்கு வசதியாகப் போயிற்று.

பாட்டிலும் கையுமாக விஞ்ஞானி. பரிதாபமாக ஆம்னி. தனபாலனின் ஆட்கள் மெல்ல மெல்ல மீண்டும் ஊழல் சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்கத் தொடங்கினர்.

ஒருநாள் மெல்லக் கேட்டார் தனபாலன். "என்ன வரவர ஆம்னியின் சக்தி குறைந்து வருகிறதே" என்றார்.

பெரிதாகச் சிரித்தார் ராம்ஜி.

"அவன் எந்திர மனிதன்தானே. கடிகாரத்தில் சாவி கொடுக்கிறோம். ஓடுகிறது. சாவி குறையக் குறைய வேகம் குறைந்து, ஒருநாள் நின்றே விடுவதில்லையா? அதைப் போலத்தான் இவனும்."

"சரியாகப் புரியவில்லையே."

"இதோ பார். போன வருடம் அவனை 'எனர்ஜைஸ்' செய்தேன். முந்நூறு நாட்கள் தான் அவன் வாழ்வு. நானே இரவு பன்னி

ரண்டு மணிக்கு அவனை ஜெயரேட்டரிக்குக் கூட்டிச் சென்று எனர்ஜை ஜஸ் செய்ய வேண்டும் பிறகு முந்நூறு நாட்களுக்குக் கவலையில்லை.''

ராம்ஜி கூறினார்.

அந்த இரவிலேயே இருவரையும் ஒழிக்கத் திட்டம் தீட்டினார் தனபாலன். இரவு பன்னிரண்டு மணி! குறித்துக் கொண்டார்.

அடுத்த நாள்.

இரவு எட்டு மணியில் இருந்தே குடிக்க ஆரம்பித்துவிட்டார் ராம்ஜி. கண்களில் சிவப்பு விளக்கு எரிய அருகில் நின்றிருந்தான் ஆம்னி. ஏதோ விபரீதத்துக்கு அறிகுறி.

''இன்னும் கொடு. இன்னும் கொடு'' குடித்துக் கொண்டே இருந்தார் ராம்ஜி. அவருக்கு போதை ஏற ஏற தனபாலனின் புத்தகத்தில் கணக்கு ஏறிக் கொண்டே இருந்தது. ''ஆயிரத்து நூறு. நூற்றைம்பது...

மணி பதினொன்றரை.

தன்னுடைய இறுதித் திட்டத்தை ஆரம்பித்தார் தனபாலன். மெல்ல ஒரு பெட்டியை எடுத்தார். ''இதோ பார்த்தாயா. ராம்ஜி வெளிநாட்டுச் சரக்குகள். விலை உயர்ந்த கடிகாரங்கள். டிரஸ்கள் எல்லாம் உனக்குத் தான்...''

ஆம்னி கோபத்துடன் எழுந்தான். தனபாலன் பேச்சை மாற்றினார்.

''எல்லாம் உனக்குத்தான். பணம் கொடுத்துவிட்டே எடுத்துக் கொள். பணம் இல்லாமல் வேண்டாம்.''

கோபத்துடன் எழுந்த ஆம்னி மீண்டும் அமர்ந்து கொண்டான்.

விஞ்ஞானி ராம்ஜியின் முகத்தில் ஏமாற்றம். ஊழலையே ஒழிக்க நினைத்து 'ஆம்னி' என்ற இயந்திர மனிதனைப் படைத்த அந்த மாபெரும் விஞ்ஞானி அந்த நேரத்தில் புகழ் போதைக்கும், குடிபோதைக்கும் அடிமையாகி இருந்தார். அந்தப் போதையில். என்ன பேசுகிறோம் என்பதை அறிந்து கொள்ளாமலே உளறினார்.

''இன்னும் இருபது நிமிடங்கள்தான் ஆம்னி. உன் சக்தியெல்லாம் தீர்ந்துவிடும். அப்புறம் இந்தப் பெட்டியை நான் எடுத்துக் கொள்கிறேன். என்ன செய்ய முடியும் உன்னால்...?''

ஆம்னி பரிதாபமாக உட்கார்ந்திருந்தான்.

ஒரு கடிகாரத்தை எடுத்து மேஜைமேல் வைத்தார் தனபாலன்.

மணி பதினொன்று ஐம்பத்தைந்து. ஆம்னியின் தலை சாய ஆரம்பித்தது.

''டிரிங்... டிரிங்... டிரிங்...''

அலாரம் அடித்தது.

மணி சரியாகப் பன்னிரண்டு.

ஆம்னியின் தலை பூராவாகச் சாய்ந்திருந்தது.

விஞ்ஞானி ராம்ஜி அவசர அவசரமாகப் பெட்டியை இழுத்துக் கொண்டார். உள்ளே இருக்கின்ற பொருட்களை ஆவலுடன் பார்த்தார்.







ஆனால்...?

என்ன விந்தை!

தலை சாய்ந்திருந்த ஆம்னி மெல்ல எழுந்தான். பூதாகாரமாக எழுந்துநின்றான். கண்களில் சிவப்பு விளக்கு ''பீக்... பீக்...'' என்ற சத்தத்துடன் எரிந்தது.

மெல்ல விஞ்ஞானியின் அருகில் வந்த ஆம்னி, கைகளை அவர் கழுத்தில்வைத்தான்.

அழுத்தினான்...

ஊழல் யார் செய்தாலென்ன? அவர்களை அழிக்க வேண்டும் என்பதுதான் அவனுக்குப் போடப்பட்ட உத்தரவு.

''ஹெல்ப்... ஹெல்ப்...'' ராம்ஜி அலறினார்.

குரூரமாகச் சிரித்த தனபாலன் கடிகாரத்தில் நேரத்தைப் பார்த்தார்.

அப்போதுதான் மணி பன்னிரண்டு. முன்னர் வைத்த கடிகாரத்தில் வேண்டுமென்றே நேரத்தை மாற்றி வைத்து, ராம்ஜியை ஏமாற்றியதை நினைத்துச் சிரித்தார்.

விஞ்ஞானியின் குரல் ஓய்ந்தது.

ஆம்னியின் சக்தியும் தீர்ந்தது.

சிவப்பு விளக்கு அணைய, அப்படியே எஜமானரின் மேல் சாய்ந்தான் அவன்.

இருவரும், கட்டி அணைத்த மாதிரி கீழே விழுந்தனர்.

தனபாலன் குதித்து எழுந்தார்.

''ஹா, ஹா, ஹா... ஆம்னியும் ஒழிந்தான்... அவனை உருவாக்கிய விஞ்ஞானியும் ஒழிந்தான். இனிமேல் எனக்கு எதிரியே இல்லை...''

ஆம்! அவர் ஊழல் சாம்ராஜ்யத்துக்கு மீண்டும் தடையேது...?



# இன்றொரு மகாத்மா

முத்து. தங்க. ஐயப்பன்.

"ஹலோ...ஃப்! த்ரீ ஃபோர் நைன் த்ரீ திரோதானே?"

"எஸ்... பிரின்சிபால் சரவணன் ஸ்பீக்கிங்..."

"குட் மார்னிங் ஸர்... நான் வைஸ் பிரின்சிபால் ராமமூர்த்தி பேசறேன்... நீங்க உடனே லீவைக் கேன்சல் பண்ணிட்டுக் காலேஜுக்கு வரணும் ஸர்..."

"என்ன விஷயம். திடீர்னு இப்படி லேட் நைட்லே...?"

"நம்ம காலேஜ் யூனியன் சேர்மன் முத்துக்குமரனைக் கொஞ்ச நேரத்துக்கு முன்னே யாரோ குத்திட்டாங்க சார்..."

"வாட்...! ஹாரிபிள்... எப்போ...? எங்கே?"

"சித்ரா மெடிக்கல்சுக்கு முன்னாடி ஸர்... யார்னு தெரியலே... சீரியஸா இருக்கு ஸர்... ஆமா. ஜி. எச்.லெதான் இருக்கான்... மறுபடியும் அங்கேதான் ஸார் போறேன்..."

"க்விக்... நான் இதோ புறப்பட்டுட்டேன்... மேனேஜ்மெண்டுக்கு உடனே தகவல் கொடுத்துடுங்க... குமரனை எப்படியும் காப்பாத்தப் பாருங்க... பேசிட்டு நிக்க வேணாம்..."

* * * * *

இருச்சி புறநகரைத் தாண்டியதும் சரவணனின் பியட் சீறத் தொடங்கியது. ஸ்டியரிங்கை விரல்களால் அணைத்திருந்த திருமதி கயல்விழி சரவணன் பின் இருக்கையிலிருந்த தன் கணவரைத் திரும்பிப் பார்த்தாள்.

ஹூம்... "இந்த அட்மினிஸ்ட்ரேஷன் பிடுங்கல் இல்லாமல் கொஞ்சநாள் நிம்மதியாய் இருக்கட்டும் என்று இவரை இழுத்துக் கொண்டு வந்தால் இரண்டே நாளில் இப்படியா...? இதோ, முனி அடித்த மாதிரி ஆகிவிட்டார்... இனி மறுபடியும் கல்லூரிச் சிந்தனைதான்...

இந்த மாதிரியான தனிமைப் பயணங்களால் கயல்விழியின் வெல்வெட் தோள்களும், தந்தக் கழுத்தும், ஜிமிக்கிக் காதுகளும் சரவணனின் குறும்புச் சீண்டுதல்களால் அவ்வப்போது சிலிர்ப்பது வழக்கம்...

ஆனால் இப்போது சரவணன் தம் கைகளை அடக்கமாய் மார்பில் கட்டிக் கொண்டு, வலதுகைச் சுண்டுவிரல் நகத்தைக் கொறித்தபடி முத்துக்குமரனைப் பற்றிய சிந்தனைகளில் மூழ்கிவிட்டார்.

* * * * *

"சார்... நம்ம கல்லூரியிலே இந்த ஆண்டு தேர்தல் நடத்துங்க சார்..."

முதல்வர் சரவணன் வியப்புடன் நிமிர்ந்தார். முத்துக்குமரன்!

"உனக்கென்ன அதைப் பத்தி? இப்பத்தான் பி.ஏ. செகண்ட் இயர் வந்திருக்கே... ஒழுங்கா டிகிரி முடிக்கிற எண்ணமில்லையா?"

"நிச்சயம் ரேங்க்கோட டிகிரி வாங்குவேன் சார்... ஆறு வருஷமா நம்ம கல்லூரியில யூனியன் தேர்தலே நடக்காம இருக்கு சார்... இந்த வருஷமாச்சும் அதை நடத்துங்க...

முதல்வர் முறுவலித்தார்.

"வெல்... நம்ம காலேஜ்ல வழக்கமா நான் செலக்ட் பண்ற பையங்கதான் மாணவர் பேரவையை அமைச்சு நடத்தி வருவாங்க... இந்த வருஷம் நீயே யூனியன் சேர்மனா இரு... திருப்திதானே?"

"இல்லே சார்... நீங்க நியமிக்கற மாணவன், பொம்மையா ஆட முடியுமே தவிர, தலைவனாச் செயல்பட முடியாது... தேர்தல் மூலமா ஜெயிச்சு வர்றவங்கதான் உண்மையாச் செயல்பட முடியும்... அதுக்காகத்தான் இந்த வருஷத்திலிருந்தாவது தேர்தல் நடத்துங்கன்னு எல்லா மாணவர்கள் சார்பாகவும் வேண்டிக்கறேன்..."

முதல்வர் எச்சரிக்கை அடைந்தார்.. பையன் நிதானமாய் ஆனால் உறுதியாய்ப் பேசுகிறான்... படிப்பு. பேச்சு. விளையாட்டு. நாடகம் என்று அத்தனையிலும் பரிசுக் கோப்பைகளை வென்றுவரும் இவனுக்கு மாணவர்கள் மட்டுமல்ல... ஆசிரியர்களிலும் இரசிகர்கள் உண்டு...

முத்துக் குமரன்... கல்லூரியிலே யூனியன் தேர்தல்தான் பையன்களோட யூனிட்டியைக் கெடுக்குது...'தேர்தல் வந்தாலே கூடவே கட்சி அரசியல், ஜாதி பேதம், கோஷ்டிப் பூசல், வகுப்பிலே ஒழுங்கீனம்னு எல்லா ஒழுக்கக் கேடும் வந்துடுது. ஆறு வருஷமா தேர்தலும் இல்லாமே ஸ்டிரைக்கும் இல்லாமே நம்ம காலேஜ் ஒழுங்கா நடக்குதே... அது பிடிக்கலையா உனக்கு?"

''எப்பவோ, ஏதோ காரணங்களுக்காகத் தவறு நடந்திருக்கலாம் சார்... அதுக்காக ஏன் விரக்தி அடையணும்? ஒரு நம்பிக்கை-யோட நல்லதை நிலைநாட்ட உண்மையா முயற்சிக்கலாமே... இராணுவ ஆட்சி வந்தா நம்ம நாடு கூட அமைதியாத்தான் இருக்கும்... ஆனா இன்னும் மக்களாட்சியி லேயே நம்பிக்கை வைச்சிருக்கோமே... ஏன்?''

''அது வேறே... இது வேறே... நாளைக்குத் தேர்தலை நடத்திட்டு வருஷம் முழுக்கக் காலேஜ் மூடிக் கிடந்தா நீயா பொறுப்பு?''

''தேர்தல் நடந்து ஒருவேளை நான் பொறுப்புக்கு வந்தா, அனாவசியமா நம்ம காலேஜை மூட நான் காரணமாவே இருக்க மாட்டேன், சார்... இது சத்தியம்...''

''பெரிய்ய காந்தி...! ரொம்பவும் பேசாதே... பேசாமே வகுப்புக்குப் போய் வாத்தியார் சொல்லித் தர்றதைப் படிக்கப் பார்...''

''சார்... நம்ம நாடு மக்களாட்சி முறைக்கு நல்ல பயிற்சி கொடுக்கறதும் உங்க கடமை சார்...''

முதல்வர் திகைத்தார். இனி இவனைப் பேச விடுவது ஆபத்து...

''இதோ பார்... தேர்தலை விட எனக்கு நம்ம காலேஜ்தான் முக்கியம்... இங்கே தேர்தல் நடக்காது... போ... போய்ப்படி... இல்லேன்னா தேர்தல் வேணும்னு கேட்டு ஸ்டிரைக் பண்ணிப்பசர்...''

* * * * *

அடுத்தநாள், கல்லூரி தொடங்குவதற்குமுன் முத்துக்குமரன் மாணவர்களைக் கும்பல் கும்பலாகச் சந்தித்துப் பேசினான்.

பேராசிரியர்களிடம் முதல்வர் சரவணன் கலந்து ஆலோசித்துவிட்டு, டி.சி. கொடுப்பதற்குத் தகுதியான மாணவர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு ஆரம்பமானார்.

கல்லூரி தொடங்குவதற்கான மணியும் அடித்தாகி விட்டது. முத்துக் குமரனின் தலைமையில் மொத்தமாய்த் திரண்டு வந்த மாணவர்கள் அங்கங்கே அணிபிரிந்து அவரவர்களின் வகுப்புக்கு அமைதியாய்ப் போனார்கள்!

வகுப்புக்கள் வழக்கத்தைவிட வெகு ஒழுங்காய் நடந்தன. முதல்வருக்கு ஒன்றும் புரியவில்லை.

பகல் ஒரு மணிக்குக் கல்லூரி முடிந்தது-சற்று நேரத்தில் பியூன் வந்து முதல்வரின் காதில் கிசுகிசுத்தான். முதல்வர் விரைவாய் எழுந்து வந்து பார்த்தபோது, எல்லா மாணவர்களும் ஒட்டுமொத்தமாய்க் கல்லூரிக்கு



வெளியே சென்று உட்கார்ந்திருந்தார்கள். ஒருவரும் சாப்பிடவில்லை.

தேர்தல் நடப்பதாய் முதல்வர் அறிவிக்கும் வரை நாள்தோறும் இப்படியே பகல் வேளை உண்ணாவிரதம் தொடரும் என்று மாணவர்கள் எழுதிக் கொடுத்த கோரிக்கையை முத்துக்குமரன் முதல்வரிடம் கொண்டு வந்து கொடுத்தான்.

பிற்பகலில் கல்லூரி தொடங்கியதும் மாணவர்கள் அனைவரும் மீண்டும் ஒரு விநாடிகூடத் தாமதமில்லாமல் வகுப்புக்கு வந்துவிட்டார்கள்.

முதல்வர் திணறிவிட்டார்... இப்படி ஒரு போராட்டத்தை அவர் எதிர்பார்க்கவே இல்லை...

உண்ணாவிரதப் போராட்டம் தொடரத் தொடர, ஊருக்குள்ளே மாணவர்களின் நியாயமான போராட்டத்தை அதிசயித்துப் பாராட்டுபவர்களின் எண்ணிக்கை பெருகிக் கொண்டே போனது.

முத்துக்குமரனின் மேல் உறுதியான ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று முதல்வரின் அதிகார உணர்வு துடித்தது. ஆனால் அவரது மனச்சாட்சி தடுத்தது.

* * * * *

"கங்ராட்ஸ் முத்துக்குமரன்... அமோகமான வாக்கு வித்தியாசத்திலே மாணவர் தலைவனா ஜெயிச்சிருக்கே... ஒரு அடிதடி இல்லாமே, ஆடம்பரம் இல்லாமே, போட்டியிட்ட எல்லாருமே தேர்தலை எளிமையா, அமைதியா நடத்தறதுக்கு நீ சின்சியரா வாதாடியிருக்கே... உன்னை மாதிரி உண்மையான ஒரு மாணவர் தலைவன் இடைப்பான்னா, வருஷா வருஷம் தாராளமா யூனியன் தேர்தலை நடத்தலாம்..." நீ ஒரு இலட்சியத் தலைவனா இருப்பேன்னு நம்பறேன்..."

"உங்க நம்பிக்கையைக் காப்பாத்துவேன் சார்..."

காப்பாற்றினான்.

மாணவர் தலைவன் ஆனபிறகும் எப்போதும் போலவே, பாடப் புத்தகங்களுடன் வகுப்புகளுக்கு வந்தான். தன்னுடன் போட்டியிட்டுத் தோல்வி அடைந்தவர்களிடம் முன்னைக் காட்டிலும் தோழமையுடன் பழகினான். வகுப்பறையில் சற்றே ஒழுங்கீனமாக நடக்க முயன்ற மாணவர்களைத் தனியே அழைத்து அன்போடு அறிவுரைகள் கூறினான். மாணவர்களின் படிப்பு, ஸ்காலர்ஷிப் மற்றும் தனிப்பட்டச் சிக்கல்களைப் பேரவைச் சார்பாளர்களின் உறுதுணையுடன் உடனுக்குடனே கவனித்தான்.

அப்புறம் போராட்டங்களும் நடத்தினான். கல்லூரிக்குத் தமிழிலே பெயர்ப் பலகை வைக்க வேண்டுமென்று ஒரு போராட்டம்... இப்படிப் பலப்பல...

ஆனால் ஒருநாளாவது கல்லூரி மூடவில்லை... ஒரு வகுப்பிலாவது இடையூறு இல்லை...

அறையில் முதல்வரிடம் முறையான காரணங்களை முன்வைத்துப் பணிவு மீறுமல், உறுதி குன்றாமல் வாதாடி, விட்டுக் கொடுக்க வேண்டியவற்றில் நெகிழ்வுக் காட்டிக் கல்லூரியின் வேலை நேரத்திற்குப் பின் ஊர்வலங்கள் நடத்தி... கண்ணியம் காத்து...

முதல்வருக்கு அவரது பதவி மேலேயே இப்போது ஒரு மதிப்பும் பிடிப்பும் உண்டானது. அந்த ஊர் சப் — இன்ஸ்பெக்டருக்கு இப்போது தலைவலியெல்லாம் வருவதே இல்லையாம்... முதல்வருக்குப் போன் போட்டுச் சொன்னார்!

* * * * *

சர்ரக்...!

முதல்வர் சரவணன் திடுக்கிட்டு முன்னால் சாய்ந்தார். கரி மூட்டையைத் தூக்கிக் கொண்டு சாலையின் குறுக்கே திடீரென்று வந்த ஒரு கூனல் கிழவன் மயிரிழையில் தப்பி விட்டான்.

"பார்த்து ஓட்டு கயல்... கொஞ்சம் மெதுவாவே போ..."

கரி மூட்டையைச் சுமந்து கொண்டு கவலையே இல்லாமல் சாலையைக் கடந்து செல்லும் அந்தக் கிழவனைப் பார்த்ததும் சரவணனுக்கு முத்துக்குமரனின் நினைவுதான் வந்தது.

பியூன் அந்தச் செய்தியைச் சொன்னபோது முதலில் அவரால் நம்பவே முடியவில்லை. ஊருக்குள் ஒரு பிரபலமான பத்திரிகை அலுவலகத்தில் இரவில் செய்தித்தாள் கட்டுகளை முதுகில் சுமந்துகொண்டு போய், வேனில் அடுக்கும் கூலி வேலையைத் தினமும் முத்துக்குமரன் செய்கிறானாமே...

வறுமையான குடும்பம்... வயோதிகமான பெற்றோர்கள் என்று மட்டும் தான் அவருக்கு முத்துக்குமரனைப் பற்றித் தெரியும்... படிப்புச் செலவுக்காக இப்படியா கூலி வேலை செய்கிறான்...?

அவனைக் கூப்பிட்டு விசாரிக்கலாம் என்று நினைத்தார்... வேண்டாம்... முத்துக்குமரன் தலைநிமிர்ந்து ஒப்புக் கொள்வான்...

* * * * *

"வண்டியை வீட்டுக்கு விடவா... இல்லே, நேரா ஜி. எச்.சுக்கா?" — கயல்விழி.

"என்னை ஜி. எச். கலே விட்டுட்டு நீ வீட்டுக்குப் போ."

மருத்துவமனைக்குள் நர்சுடன் பேசிக் கொண்டிருந்த துணை முதல்வர் முதல்வரின் பியட்டைப் பார்த்ததும் ஓடிவந்தார்.

கேள்வி

இரண்டே படங்களில்
துடுக்காய்ப் பேசி
மிடுக்காய் நடித்த
சிறுமி கேட்டது:
"எத்தனை படத்தில்
தோன்றி முடித்தால்
எம். பி. ஆகலாம்?"
—எஸ். வாணி சங்கர்.



"என்ன ஆச்சு மிஸ்டர் ராமமூர்த்தி...? குமரன் எப்படி இருக்கான்?"

"வாங்க, உள்ளே போவோம்..."

முதல்வரை உள்ளே அழைத்துக் கொண்டு போன துணை முதல்வர் நடந்தவற்றைச் சுருக்கமாகச் சொன்னார்.

எதிர்பாராமல் திடீரென்று நடந்துவிட்ட நிகழ்ச்சியாம் அது. மூன்றாமாண்டு வணிகவியல் படிக்கும் கல்லூரி மாணவன் தலீப் சிங் 'செகண்ட்ஷோ' போயிருக்கிறான். திரையரங்கில் பிரதமர் இந்திராகாந்தியின் இறுதி யாத்திரையைக் காட்டியிருக்கிறார்கள். சோக மயமான அந்தச் சூழலில், உணர்ச்சிவசப்பட்ட யாரோ இருவர் — தலீப்சிங்கின் பின் இருந்தவர்கள் — படம் நெடுகிலும் தலீப்சிங்கைச் சீண்டியிருக்கிறார்கள். படம் முடிந்த பின்னும் அவர்கள் பின் தொடர்ந்து வந்து தலீப் சிங்கை வம்புக்கு இழுத்திருக்கிறார்கள்.

கைகலப்பு ஆகிவிட்டது. பத்திரிகை அலுவலகத்தில் வேலை முடிந்து வந்து கொண்டிருந்த முத்துக்குமரன் சண்டையைப் பார்த்துவிட்டு ஓடிப் போய் விலக்க முயன்றிருக்கிறான். தலீப் சிங்கைக் கத்தியால் குத்த வந்தவனை முத்துக்குமரன் தடுத்த போது அவன் ஆத்திரத்தோடு முத்துக் குமரனை மாறி மாறிக் குத்திவிட்டானாம். முத்துக்குமரன் மயங்கிச் சரிந்ததும் அந்த இருவருமே தப்பி ஓடிவிட்டார்களாம்... அதிர்ச்சியால் திகைத்திருந்த தலீப் சிங்கும், அங்கே ஓடிவந்த பொதுமக்கள் சிலரும் முத்துக்குமரனைத் தூக்கிக்கொண்டு அரசு மருத்துவமனைக்கு விரைந்திருக்கிறார்கள்...

"இப்ப எப்படி இருக்கான்...?"

"இன்னும் சீரியஸ்தான் சார்..."

* * * * *

முக்கால் மணிநேரம் கழித்து முதல்வர் சரவணன் மருத்துவமனைக்கு வெளியே வந்தார். விடிந்தும் விடியாத அந்தப் பனி நேரத்தில் அறுநூறுக்கும் மேலே மாணவர்கள் கூட்டம். முதல்வர் கரகரத்த குரலில் சொல்லத் தொடங்கினார்.

"நம் எல்லோருடைய பிரார்த்தனைக்கும், டாக்டர்களோட கடுமையான முயற்சிக்கும் பலன் இல்லாமே 'நம்ம முத்துக் குமரன்... எஸ்... இப்ப போஸ்ட்மார்ட்டம் நடந்துட்டிருக்கு...' முதல்வர் தலைதாழ்த்தி நின்றார்.

ஒரு விநாடி அதிர்ந்து நின்ற மாணவர்கள், "முத்துக்குமரா...ஆ" என்ற அலறலுடன் மருத்துவமனைக்குள்ளே ஓட முற்பட்டார்கள்.

"ஸ்டாப் இட்..." முதல்வரின் இடிக் குரல் அவர்களை நிறுத்தியது. "யாரும் அந்தப் பக்கம் நகரக்கூடாது. முத்துக்குமரன் ஒரு டிஸிப்ளினோட வாழ்ந்தவன்... மனசார உண்மை பேசி, பேசியபடி வாழ்ந்து காட்டினவன்... அவனோட கட்டுப்பாட்டு உணர்வுக்கு நாம் இப்ப மரியாதை காட்டணும்...



மானேஜர்: "ஹெட் கிளார்க் சாப்பிடப் போயாச்சா?"

பியூன்: "இல்லை சார்! இன்னும் தூங்கிக்கிட்டு இருக்காரு!"

மானேஜர்: "எழுப்பு அவரை! லஞ்சுக்குக் கூடப் போகாம அப்படி என்ன தூக்கம்!"

ஆர். எஸ். சுப்பிரமணியன்.

இது பொது மருத்துவமனை... எல்லாரும் உள்ளே போனா அது பப்ளிக் நியூசென்ஸ் ஆயிடும்... முத்துக்குமரனை மதிக்கிறயாரும் இப்படி ஒழுங்கீனமா நடக்கக் கூடாது..."

முத்துக்குமரனின் தூய்மையான தலைமையில் கண்ணியத்துக்கும், கட்டுப்பாட்டுக்கும் பயிற்சி பெற்றிருந்த அந்த மாணவர் பட்டாளம் மந்திரம் போட்டது போல் அப்படி அப்படியே நின்றது.

"முத்துக்குமரனோட பெற்றோர்கள் இன்னைக்குச் சாயந்திரம் இறுதி ஊர்வலம் நடத்தலாம்னு சொல்லியிருக்காங்க... உங்க சார்பா குமரனோட பாடியை நானும் யூனியனைச் சேர்ந்த நிர்வாகிகளும் அவங்க வீட்டுக்குக் கொண்டு போறோம்... நீங்க அங்கே வரலாம்... இப்ப இங்கே கூடி நிக்காமே எல்லோரும் கலைஞ்சுப் போகலாம்... குமரனோட இறுதி ஊர்வலத்திலே நீங்க கலந்துக்கிறதுக்காக இன்னைக்குக் காலேஜுக்கு லீவு..."

மாணவர்கள் பலரும் ஓவென்று அழுதார்கள். அந்த அழுகையின் ஊடே ஒரு குரல் உயர்ந்தது. "நோ... எங்களுக்கு லீவு வேணும்... என்னைக்கும் போலக் கிளாஸ் அட்டெண்ட் பண்ணிட்டு இறுதி ஊர்வலத்திலே நாங்க கலந்துக்கிட்டாத்தான் எங்க உத்தமத் தலைவனோட ஆத்மா சாந்தியடையும்... எங்களுக்கு லீவு வேணும்..."

"வீ வாண்ட் நோ ஹாலிடே..." உணர்ச்சிகரமான குரல்கள் ஒருங்கிணைந்து அலை போல் முழங்கின.

முதல்வர் திகைத்து நின்றார். இது என்ன கனவா...? நனவா...? நம்பவே முடியவில்லையே...? ஆனால் இதோ... இதோ முழங்கிக் கொண்டிருக்கிறார்களே... இது சத்தியத்தின் முழக்கம் அல்லவா...?

ஆம். இங்கே தர்மத்தின் ஊற்றுக்கண்கள் இன்னும் அடைபடவில்லை. இது ஞான பூமி.... பாரத பூமி...

முதல்வருக்கு மனம் நெகிழ்ந்தது. இந்தப் புண்ணிய பூமியில் இன்னும் மகாத்மாக்கள் உருவாக முடியும் என்ற நம்பிக்கையோடு இரு கண்ணீர் முத்துக்கள் அவரது கண்களில் திரண்டன.

* கல்கி இதழில் ஓட்டல்கள் பற்றி வந்த கட்டுரைக்கு ஒரு விளக்கமாக இக்கடிதத்தை வரைகிறேன்...

...இந்தத்தொழிலைப் பொறுத்தவரையில் ஒரு சாபக்கேடு மூலப்பொருள்களின் விலைவாசி எவ்வளவு தான் ஏறினாலும் உற்பத்தியாகும் பண்டங்களின் விலை மட்டும் அதிகரிக்கக் கூடாது. அலுவலகங்களில் தொழிற்சாலைகளில் விலைவாசி ஏறிவிட்டது என்று இன்கிரிமெண்ட் கேட்பவர்கள் ஹோட்டலில் மட்டும் விலை ஏற்றம் கூடாது என்கிறார்கள்.

ஒரு இரும்புக் கடை முதலாளியின் பையன், அல்லது மற்ற தொழிலில் உள்ள முதலாளியின் பையன்கள் அதே தொழிலைச் செய்வார்கள். இந்த ஹோட்டல்தொழிலைப் பொறுத்தவரையில் எங்கள் பையன்கள் இந்தத் தொழிலே வேண்டாம் என்று சொல்கிறார்கள். காரணம், அவ்வளவுகஷ்டமான தொழில். ஒரு ஹோட்டலைத் திறமையாக நிர்வாகம் பண்ணுகிறவன், எந்தத் தொழிலையும் திறமையாகச் செய்ய முடியும். வாடிக்கையாளரையும் திருப்திப்படுத்தி, தொழிலாளர்களையும்திருப்திப்படுத்தி, அதிகாரிகளையும் அனுசரித்து, விலைவாசி ஏற்றத்தையும் சமாளித்து, அதேநேரம் தரம் குறையாமல் பலகாரங்கள் தயாரித்துத் தருவது பிரும்மப் பிரயத்தனம். அதனால்தான், இந்தத் தொழில் அழிந்து வருகிறது. சென்னையில் கடந்த 10 வருடங்களில் எத்தனை புதிய ஹோட்டல்கள் திறந்து இருக்கின்றன என்பதைக் கணக்குப் பார்த்தால் புரியும்.

சேலம், வீ. மோஹன்.
பார்ட்னர், வசந்தவிஹார் & ராஜ்நிவாஸ்.

(அன்பர் திரு. வீ. மோஹன் "ஹோட்டல்கள் ஜாக்கிரதை" கட்டுரைக்கு வரிக்கு வரி மறுப்பு தெரிவித்துள்ளார். திரு. மோஹன் போன்ற பலர் நடத்துகிறவை நல்ல ஹோட்டல்களாகவே இருக்கலாம். ஆனால் வேறு பல ஹோட்டல்கள் கட்டுரையில் விளக்கப்பட்டிருப்பதை விடவும் மோசமாக நடக்கின்றன, யாரும் மறுக்க முடியாது. —ஆசிரியர்.)

* 20.1.85, 'கல்கி' இதழில் வெளியான "திக்கித் தவித்த சிங்கவால் குரங்கு" என்ற எனது கட்டுரைக்கு மறுப்புத் தெரிவித்துத் தங்களுக்கு அம்பாசமுத்திரம் வனச்சரக அலுவலகத்தில் இருந்து வந்த கடிதம் பார்த்தேன்.

நாங்கள் விக்கிரமசிங்கபுரம் என்ற ஊரில் நேற்றோ, இன்றோ வாழ வந்தவர்கள் அல்ல. 24 வருடங்களாக வசித்து வருகின்றோம். இப்பகுதியில் வாழும் குரங்குகளைப் பற்றி நன்கு அறிந்தவர்கள்தான் நாங்கள். சாதாரணக் குரங்கிற்கும், சிங்கவால் குரங்கிற்கும் வித்தியாசம் தெரியாதவர்கள் அல்ல.

என் கட்டுரையில் நான் இவ்விரு குரங்குகளும் முண்டந்துறை சரணாலயத்திலிருந்து தப்பி வந்துவிட்டன எனக் குறிப்பிட்டிருந்தேன். முண்டந்துறை சரணாலயத்தின் மலையின் அடிவாரத்தில் தாமிரபரணி ஆற்றின் கரையில் அமைந்துள்ளதே பாபநாசமும், அதனை அடுத்த விக்கிரமசிங்கபுரமும். இச் சரணாலயத்தில் இருந்து இக்குரங்குகள் தவறி வராது என்ற அதிகாரியின் அனுமானம் வேடிக்கையாக உள்ளது.

விக்கிரமசிங்கபுரம். தேனமிர்த ஷியாமளா.

* 'தராசு' கேள்வி பதில் பகுதியில் டூரிங் திரையரங்குகளைப் பற்றி மிக மோசமாக வர்ணித்து பதிலளித்துள்ளீர்கள். நாங்கள் ஆறு நகரும் திரையரங்குகளை நடத்தி வருகிறோம். சிறப்பான ஒலி, ஒளி, அமைப்புக்களுடன் வசதியான இருக்கைகளுடன், சுகாதார முறைப்படி நடத்தி வருகின்றோம். நீங்கள் போய்ப் பார்த்த திரையரங்கு மோசமாக இருப்பதால் ஒட்டு மொத்தமாக அனைத்து நகரும் திரையரங்குகளும் அப்படித்தான் என்று எழுதினால் எப்படி?

பாபநாசம். சிவ பார்த்திபன்.

(நல்ல நடமாடும் திரையரங்குகள் இருப்பதை மறுக்க முடியாது என்பது போலவே மோசமான டூரிங் டாக்கீஸ்கள் இருப்பதையும் மறுப்பதற்கில்லை. -ஆசிரியர்)

* "கடனுக்குக் கருத்தரங்கு" படித்தேன். இதோ எனது அனுபவம்:

வங்கி ஒன்றுக்குக் கடன் சம்பந்தமாகச் சென்றிருந்தேன். "நீங்கள் இந்திரா காங்கிரஸில் முதலில் அங்கத்தினராகி அக்கட்சியின் முக்கியப் பிரமுகர் ஒருவரையும் உடன் அழைத்துக் கொண்டு வந்தால்தான், விண்ணப்ப ஃபாரம் கிடைக்கும். கடனும் பரிசீலிக்கப்படும்" என்று ஆலோசனை வழங்கினார் மேலாளர். அவர் யோசனைப்படி தேவையான ஏற்பாடு செய்து ஒரு வாரம் கழித்து மீண்டும் அதே வங்கிக்குச் சென்றேன். அதற்குள் மேனேஜர் மாறிவிட்டிருந்தார். அவர் "இதோ பாருங்க சார், கட்சிக்காரனுக்கெல்லாம் ஐந்து வருஷம்தான் டயம். ஒரு நாளைக்கொரு மந்திரி வர்றாருங்க. இந்த மந்திரி சொல்றான்னு கடன் கொடுத்தா, நாளைக்கு வர்ற மந்திரி நீ யாரைக் கேட்டு அவனுக்குக் கொடுத்தேன்னு எங்களோட உயிரை வாங்குறானுங்க" என்றெல்லாம் கூறி என்னை அனுப்பிவிட்டார்.

ஆக, வங்கிக் கடன் பெற என்னதான் வழி? ஆளும் கட்சியில் உள்ளவர்கள் தான் கடன் பெற முடியுமானால் மற்றவர்கள் கதி? சொத்துள்ளவர்கள் தான் (செக்யூரிட்டி) கடன் பெற முடியுமானால், வக்கற்றவர்கள் கதி? உண்மையாக எத்தனை படித்து வேலையில்லாதவர்கள் கடன் பெற்றிருக்கிறார்கள்? இதற்காவது உண்மைப் புள்ளி விவரம் உண்டா?

திருச்சி. வி. ஏ. ஜெய்பாஸ்கர்.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)

# வேண்டாம் ஹோட்டல் தொழில்

வெள்ளித்திரை

# நவக்கிரக நாயகி



நாரதர் தான் தனித்தனியே கிடக்கும் கதைகளை படம் நெடுக கோர்க்கும் நைலான் நூல். தெறிக்கும் கண்களுடன், அந்தக் கண்களில் சதா விஷமத்துடன் இருக்கும் சோவை விட்டால் வேறு யார் பொருந்துவார்கள்?

'ஆட்சியிலிருப்பவர்களும் சரி, ஆட்சியைப் பிடிக்க ஆசைப்படுவர்களும் சரி, என்றைக்குமே என் பேச்சைக் கேட்பதில்லை' போல அங்கங்கே அவருடைய முத்திரைகள்.

பூர்வ ஜன்மத்து பாவ புண்ணியங்களால் தீர்மானமாவது தான் இந்த ஜென்மத்து அதிர்ஷ்டங்கள் என்பதற்கு வரிசையாய் குட்டிக் கதைகள். தற்கொலை செய்து கொள்ளப் போகும் விஜயகாந்தின் கதை ரசம். சிறைக்குப் போகும் ஆசையோடு அவர் வேட்டையில் களைத்து உறங்கும் ராஜாவை எட்டி உதைக்க, எகிறி விழும் கிரீடம் ஒரு பாம்பைக் கொன்றிருக்க, பாம்பிலிருந்து காப்பாற்றியதாய் அவருக்கு ராஜாங்க மரியாதை. ஜாலியாய் அனுராதாவோடு ஒரு டான்ஸ். அப்புறம் தளபதி பதவி. பதவி வந்ததும் தலையில் கனம். துள்ளுகிறார். மேகங்களுக்கு மேலே பொழுது போகாமல் இருக்கும் கிரகங்களுக்கு இவர் பகடைக் காய். சந்தோஷமும், பதவியும், கொலைக் குற்றமும், தண்டனையும் மாறி மாறி வருகின்றன. சுவாரஸ்யமான கதை.

மனதில் அழுத்தமாய்ப் பதிந்த இன்னொரு கதையில் டில்லி கணேஷ், கோவில் குருக்கள். ஏழை. பெண்ணுக்கு வரன் தேடி நிறைய வரதட்சணைக்கு சம்மதித்து திண்டாடும் நேரம். சரியாய்க் கழுவாத பின்கால் வழியே சனி பகவான் அவரைப் பிடித்துக் கொள்ள கோவிலிலிருந்து நகை திருடிய குற்றம் வந்து சேர, நாராயண பக்தரான அவர் எப்படி ஏழரை நாழிகைக்குள் மகா துன்பங்களை அனுபவிக்கிறார் என்பதும் சுவையான கதை.

நவக்கிரகங்களின் ஆதிக்கத்திலிருந்து எத்தனை தவம் செய்தாலும் தப்பிக்க முடியாதாம். நவக்கிரகங்களையும் ஆட்டுவிக்கும் மகா சக்தியான ஈஸ்வரியையே கிரகங்களின் சக்தி விட்டு வைக்காதாம்.

மகாபாரதத்திலிருந்து ஒரு கிளைக் கதை. சிவ புராணத்திலிருந்து ஒரு குட்டிக் கதை என்று உருவிக் கொண்டிருக்கிறார்கள்.

பாண்டியன் — நளினி, சுரேஷ் — சசிகலா, இளைய தலைமுறைக்கும் நிறைய பங்குண்டு.

தொய்வில்லாமல் போக வேண்டுமென்றால் நீளத்தைக் குறைக்க வேண்டும், டைரக்டர் சார்.

நவக்கிரகங்களும் முகத்தில் கலர் கலராய் சாயம் தீற்றியிருப்பது கொஞ்சம் சங்கடமாய்த் தான் இருக்கிறது.

கிரகங்களுக்கு எப்படி எப்படி பரிகாரம் செய்ய வேண்டும் என்பதை அவ்வப்போது படபடவென்று ஒப்பிக்கிறார்கள். பாட்டுப் புஸ்தகத்தில் போட்டால் பக்தர்களுக்கு சௌகரியமாயிருக்கும்.

—ஜெயமன்மதன்.

# அனுபவ ஒற்றுமைகளும் ஆறு வித்தியாசங்களும்



**அனுபவம்**

(கன்னடம் — தமிழில் டப்பிங்)

ஒற்றுமைகளில் சில :

(எல்லாவற்றையும் குறிக்கலாம், இடம்...?)

அச்சு பிச்சான கதாநாயகி. அபிநயாவாம். பக்கத்து வீட்டிலிருந்து காப்பிப் பொடி இரவல் கேட்கும் பெண்போல முகம். வழிசலான ஹீரோ. காசிநாத். பார்த்தால் வழிசலானவர். பாய்ந்தால் புலி. கதை, திரைக்கதை, டைரக்ஷன், தயாரிப்பு எல்லாம் இவரே. அட்டகாசமாய் யாவற்றையும் பண்ணியிருக்கிறார். ஒரு மாதிரியான ஒரு பெண் —ஹீரோவை வசப்படுத்தி வலையில் மாட்ட வைக்கும் மாதவி.

மூன்று மெயின் காரக்டர்கள். மற்ற படி,

செக்ஸ் புக் கேட்பது. அட்வைஸர் பெயர் என்ன? உடற்பயிற்சி பண்ணும் அழகு நாயகன் தன்னை இழப்பது.
எல்லாம் இங்கேயும் உண்டு.

**வித்தியாசங்கள்:**

1. ஒரிஜினல்
2. க்ளைமாக்ஸ் நெருங்க நெருங்க, போலீஸ் அது இது என்று சுவையான பிரச்னைகள்.
3. மோட்டார் பைக் ஹீரோ (நீப்ளிகேட் மனைவியைக் கணக்குப் பண்ணுபவர்.)
4. இயல்பான பாடல்கள்
5. ரசிக்கக் கூடிய விதமாய் காட்சி அமைப்புகள்.
6. டைரக்டர் காசிநாத்.

அருமையான நகைச்சுவைப் படம். சாணியால் அடிபடும் இடம். பாத்ரூமில் நிற்கும் போது முகத்தைச் சிலிர்த்துக் கொள்ளும் இடம் என்று ரசிகர்களைச் சிரிக்க வைப்ப தென்றே கங்கணம் கட்டிக் கொண்டு செய்திருக்கிறார்கள்.

**வெள்ளை மனசு**

(கன்னடம் — தமிழில் ரீமேக்)

சில ஒற்றுமைகள் :

(அவ்வளவையும் கூற மூணு பக்கம் வேண்டும்)

இங்கேயும் அதே. ரம்யா கிருஷ்ணன் என்ற புதுமுகம். ஒரு பக்கம் லக்ஷ்மி, ஒரு பக்கம் சசிகலா என்று பல பேரை நினைக்க வைக்கும் முகம். ஹீரோ ஒய். ஜி. மகேந்திரன். டிஸ்கோ சாந்தி ஒரு மாதிரியான பெண்.

வைத்தியர் வீட்டு முதலிரவு ஆபாசத்தின் எல்லை.

மூன்று மெயின் காரக்டர்கள். மற்ற படி,

'செக்ஸ் புக் கேட்பது. வெண்ணிற ஆடை மூர்த்தி அட்வைஸர். உடற்பயிற்சிக்கான ஆயத்தங்கள் பண்ணும் அழகு நாயகன் தன்னை இழப்பது.
எல்லாம் இங்கேயும் உண்டு.

**வேற்றுமைகள்:**

1. காப்பி
2. சவ, சவ க்ளைமாக்ஸ்.
3. கார் ஹீரோ. (நீப்ளிகேட் மனைவியைக் கணக்குப் பண்ணுபவர்.)
4. செருகப்பட்ட பாடல்கள்.
5. ஒன்றிரண்டு சொல்லலாம்தான். ச்சே. எதற்கு சொல்ல வேண்டும்?
6. சித்ராலயா கோபுவாம். இப்படியா பெயரைக் கெடுத்துக் கொள்வது?

**—ஜெயமன்மதன்.**

25 வாரங்களாகக் கர்நாடகத்தில் வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கும் அனுபவத்தின் அடிச்சுவட்டை அப்படியே ஒற்றிக் கொண்டு (அனுமதி இல்லாமல்) எடுக்கப்பட்டிருக்கும் வெள்ளை மனசு தமிழனைத் தலை குனிய வைக்கிறதே!

(வெள்ளை மனசு யூனிட்டுக்கும் மனோரமாவிற்கும் தனியாய்—பாராட்டுக்கள்.)







நிறைய அன்பர்கள் கேட்டுள்ள ஒரு கேள்வி.

? ஆசனங்களை எந்த வரிசையில் எத்தனை நிமிடங்கள் செய்வது நல்லது?

! மொத்தம் 15—20 நிமிடங்கள் செய்ய முடியுமானால்;

பத்மாஸனம் 1 முதல் 2 நிமி
சூர்ய நமஸ்காரம் 3 நிமி.
சவாஸனம் 3—4
பாவன முக்தாசனம் — 1
விபரீதகரணி — 2—3
புஜங்காசனம் — 1
பிராணயாமம் — 3
சவாசனம் மீண்டும் — 3—5

மொத்தம் 30—40 நிமிஷம் செய்யக்கூடியவர்களுக்கு.

பத்மாஸனம் 2 நிமி.
சூர்ய நமஸ்காரம் (அல்) சிரசாசனம்— 3 நிமி.
சவாசனம் 2—3
பாவன முக்தாசனம் — 1
விபரீதகரணி — 3
சர்வாங்காசனம் — 2—3
மத்ஸ்யாசனம் — 1
ஹலாசனம் — 1—2
புஜங்காசனம் — 1
சலபாசனம் — 1
தனுராசனம் — 1
பச்சிமோத்தாசனம — 1—2
திரிகோணசனம் — 1—2
சவாசனம் — 2 நிமி.
பிராணயாமம் — 3—4
சவாசனம் — 7—10

* கேள்விகளுக்கு பதில் தருகிறவர்கள் யோகாசன நிபுணர்கள் திரு. சு தாகுமார்; திரு. அசோக்குமார்; டாக்டர் ஏ. எம். மூர்த்தி.

எ.க. கலை அரசு, சென்னை—50.

? வயிற்றில் கோளாறு இருப்பவர்கள் யோகாசனம் செய்யக் கூடாது என்கிறார்களே, உண்மையா?

! என்ன மாதிரி கோளாறு என்று சொல்லவில்லையே? பொதுவாக வாயுக் கோளாறுகள், செரிமானக் கோளாறுகளுக்கு விபரீதகரணி, பாவன முக்தாசனம் உதவும். அல்சர், ஹெர்னியா, நோய்க்காரர்கள், ஆபரேஷன் செய்து கொண்டவர்கள் யோகாசனம் செய்ய வேண்டாம்.

ஆர். ஸ்ரீதர், மேமாத்தூர்.

? சர்வாங்காசனத்தை அரை மணி நேரம் செய்யலாமா? இதனால் கிட்டப் பார்வை, எட்டப் பார்வை சரியாகுமா?

! செய்யலாம். ஆனால் கண்டிப்பாக மாற்று ஆசனம் மத்ஸ்யாசனம் பத்து நிமிடம் செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் முழுப்பலன் கிடைக்காது. கண் பார்வை சீராக அமைய, சூர்ய நமஸ்காரம், பாதஹஸ்தாசனம், பச்சிமோத்தாசனம், விபரீதகரணி, ப்ராணயாமம்— இவை உதவும். தொடர்ந்து ஆறுமாத காலமாவது முறைப்படிப் பயிற்சி செய்ய வேண்டும்.



# 74 வயதில் யோகாசனம் செய்கிறேன்!

என். வேங்கடகிருஷ்ணன், திருவையாறு.

? யோகாசனம் செய்த பிறகு குளியல் வெந்நீரிலா, பச்சைத் தண்ணீரிலா?

! குளித்த பின்னர் யோகாசனம் செய்வதே சரி. இரத்த ஓட்டம் அதிகமாகும். ஆசனப் பயிற்சி முடிந்து அரைமணி நேரம் கழித்துப் பச்சைத் தண்ணீரில் குளிப்பது நல்லது. முடியாவிட்டால் வெதுவெதுப்பான நீரில் குளிக்கலாம்.

? ஆசனங்கள் செய்த பிறகு உடம்பின் முதுகுத் தசைகளில் வலி ஏற்படுகிறதே. அத்துடன் மறு நாள் பயிற்சியைத் தொடரலாமா?

! வலி ஏற்படாமலிருக்க சவாசனம் செய்யவும். ஆசனப் பயிற்சியை, உடம்பை வருத்திக் கொண்டு வலிக்க வலிக்கச் செய்யக் கூடாது. எந்த நிலையில் வலி ஏற்படுகிறதோ அங்கு நிறுத்திவிடவும். அதற்குமேல் முயல வேண்டாம். சிறிது சிறிதாகத்தான் சரிசெய்ய/கச்சிதப்படுத்த வேண்டும்.

க. இராமசாமி, கூடுவாஞ்சேரி.

? குடல் இறக்கம் வராது தடுக்க என்ன யோகாசனம் செய்ய வேண்டும்?

! சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், விபரீதகரணி, இந்த வரிசை நல்லது. குடல் இறக்கம் இருப்பதாக ஐயப்பாடு இருக்குமானால் தக்க யோகா ஆசிரியரிடம் ஆலோசனை பெற்றுப் பயிற்சியில் ஈடுபடவும்.

பி. பழனியப்பன், நாமக்கல்.

? எனக்கு என் உள்ளத்தில் என்னை அறியாமல் பீதி இருக்கிறது. இரண்டு வருஷமாக எந்த அதிர்ச்சி கேட்டாலும் தாங்க முடியவில்லை. நான் எந்த யோகாசனம் செய்ய வேண்டும்?

! ஸெக்ஸ் நடவடிக்கைகளைக் குறைத்துக் கொள்ள வேண்டும். விபரீதகரணி, பிராணயாமம் செய்வது நல்லது. அருகில் உள்ள யோகா ஆசிரியரை அணுகிப் பயிற்சி செய்வதுதான் நல்லது.

கே. இராமசாமி, சிர்பூர்.

? உடல் பருமனாக எந்த ஆசனங்கள் உதவும்?

! விபரீதகரணி, புஜங்காசனம், சலபாசனம், தனுராசனம் போன்றவற்றைத் தொடர்ந்து செய்தால் நல்ல பசியெடுக்கும்; சாப்பிட்டால் உடம்பு பருமனாகிறது!

? காலையில் ஆசனப் பயிற்சிக்கு முன்னால் காபியோ வேறு பானங்களோ சூடாக பருகலாமா? அரை டம்ளராவது?

! வெறும் வயிற்றோடு செய்வதே நல்லது. தவிர்க்க முடியாவிட்டால் அரைகப் பால் அல்லது தண்ணீர் மட்டும் பருகுங்கள். காப்பியோ வேறு பானங்களோ சாப்பிட்டால் ஏற்று என்றால் குறைந்தது ஒரு மணி நேரம் கழித்தே யோகப் பயிற்சி செய்ய வேண்டும்.

அ. அனந்தம்மாள், மண்ணச்சநல்லூர்.

? எனக்கு நாற்பத்தைந்து வயதாகி விட்டது. என் கணவர் ஆசனப் பயிற்சி செய்கிறவர். என்னையும் செய்யச் சொல்லித் தூண்டுகிறார். எனக்கோ, காலை ஐந்து மணி முதல் ராத்திரி பத்து மணி வரை வீட்டு வேலையே சரியாக இருக்கிறது. இந்த வேலைகளே உடற் பயிற்சி தானே என்று நான் சொல்லுகிறேன். என்ன வழி?

! நேரமே இல்லை என்பதும்; வீட்டு வேலைகளே உடற்பயிற்சிதானே என்பதும் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதாகும். மனமிருந்தால் மார்க்கம் உண்டு. வீட்டு வேலைகள் உடற்பயிற்சி ஆகாது; யோகாசனப் பலனும் அதனால் கிட்டாது.

எம். நாராயணசாமி, துவாகுடி.

? இரவில் உடலுறவுக்குப் பின்னர் காலையில், யோகாசனம் செய்தால் ஏதாவது தீங்கு நேருமா?

! விபரீதகரணி, பத்மாஸனம், சவாஸனம் வஜ்ராசனம் செய்யலாம். பிராணயாமம் மட்டும் அடுத்த நாள் செய்யவும்.

பி. கே. கணேஷ் பாபு, மதுரை—9.

? எனக்கு வயது இருபத்தொன்று. உயரம் குறைவாக இருக்கிறேன். இனிமேல் ஆசனப் பயிற்சியால் உயர வளர்ச்சி ஏற்படுமா?

! குறிப்பிட்ட வயதுக்குப் பிறகு உயர்வது சாத்தியமில்லை. ஆனாலும் சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம் தொடர்ந்து செய்யவும். கூன் நிமிர்ந்து கம்பீரம் வரும். உயரமாய் எடுத்துக் காட்டும். நல்ல உயரமாக வளர்வதற்குப் பத்துப் பன்னிரண்டு வயதிலிருந்தே யோகாசனங்கள் பழகுவது நற்பலன் தரும்.



உதய குமார்



அசோக் குமார்





படங்கள்: ஏ.எம். மூர்த்தி

**யோகாசன மகிமை**

டி. வி. கோதண்டராமன், ரிஷிவந்தியம்.

? மூச்சுப் பயிற்சிகளைக் காலையிலும், ஆசனப் பயிற்சியை மாலையிலும், அல்லது இது ஒரு நாள், அது ஒரு நாள் என்றும் செய்யலாமா?

! கூடாது. முதலில் ஆசனப் பயிற்சி, அப்புறம் பிராணாயாமம் என்று ஒரே நேரத்தில் தொடர்ந்து செய்வதுதான் நல்லது.

சே. செந்தமிழ், சென்னை – 17.

? குறிப்பிட்ட நேரங்களில் தான் ஆசனப் பயிற்சியைச் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறீர்கள். குறிப்பிட்ட நேரம் என்பது எப்போது வேண்டுமானாலும் (இரவு பத்து மணி) இருக்கலாமா?

! கூடாது. இரவு ஏழு மணிக்குப் பிறகு வேண்டாம். காலையில் மூன்று மணிக்குப் பிறகு செய்யலாம்.

ந. கலைச் செல்வன், புதுக் கோட்டை – 1.

? ஹைட்ரோஸில், ஹெர்னியா ஆபரேஷன்களைச் செய்து கொண்டவர்கள் ஆசனங்கள் செய்யலாமா?

! இது நபருக்கு நபர் வேறுபடக் கூடும். சாதாரணமாக ஒரு மாதம் கழித்துச் செய்யலாம். எதற்கும் டாக்டரையும் யோகாசன நிபுணரையும் கலந்தாலோசிப்பது நல்லது.

? சைனஸ் கோளாறுகளுக்கு என்று ஆசனங்கள் ஏதும் விசேஷமாக உண்டா?

சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம், நாசி சுத்தி இவை பலன் தரும். கடுமையான கபாலபாத்தி போன்றவை செய்ய, தக்க நிபுணர்களை நேரில் அணுகி ஆலோசனை பெறவும்.

என். எஸ். சுப்பிரமணியன், சிம்லா – 2.

? எனக்கு வயது எழுபத்து நான்கு. முப்பது வருஷங்களாக யோகா செய்து வருகிறேன். 45 – 60 நிமிடங்கள். மிதமான உணவு. தலைவலி, காய்ச்சல் வந்தது கிடையாது. தொடர்ந்து செய்யலாமா?

! பேஷாக. உடல் ஆரோக்கியத்தை யோகாசனங்கள் மூலம் எப்படி காக்கலாம் என்பதற்கு உங்களைப் போன்றவர்களே பிறருக்கு எடுத்துக்காட்டு.

கே. ஜெயராமன், சிதம்பரம்.

? யோகாசனம் செய்யும் போது மாற்று ஆசனம் செய்வது அவசியமா?

! சர்வாங்காசனம் முடிந்த பிறகு மத்ஸ்யாசனம். புஜங்காசனத்துக்குப் பிறகு ஹலாசனம். மற்றபடி இடையிடையே சவாசனம் செய்யுங்கள்.

பி. சந்திர சேகரன், நெய்வேலி.

? எனக்குச் சர்க்கரை நோயும், மூலமும் உள்ளது. ஏற்ற யோகாசனம் எது?

!

அர்த்தமச்சேந்திராசனம், வக்ராசனம், சக்ராசனம் இவற்றை யோக முத்ராவுடன் செய்து வரலாம்.

எஸ். இராமனுதன், போரூர்.

? யோகா பழகிய பிறகு மலச்சிக்கல் ஏற்பட்டு விட்டது. காரணம் என்ன?

! வெறும் வயிற்றில் மிகச் சிறிதளவு தண்ணீர் மட்டும் பருகிவிட்டு யோகாசனம் செய்ய வேண்டும். ஆசனங்களைச் சரியான முறையில் செய்தால் மலச்சிக்கல் ஏற்படாது. மலச்சிக்கல் நீங்கும். தக்கவரிடத்தில் நேரில் ஆலோசனை பெறவும்.

நா. வேங்கட நாராயணன், கருங்குளம்.

? கண் நோய் என்பது எது? மெட்ராஸ் ஐ தானா?

! மெட்ராஸ் ஐ போன்ற தொற்றுநோய் உள்ளவர்கள் யோகா செய்ய வேண்டாம். மற்றபடி கிட்டப் பார்வை, தூரப் பார்வை இவை நோய்கள் அல்ல.

வி. ஏ. தேவராஜன், திருச்சிராப்பள்ளி.

? புதிதாக யோகாசனம் பயில விரும்புகிறவர் எந்த வயதில் தொடங்கலாம்? எனக்கு வயது நாற்பத்தேழு.

! ஆறு வயது முதல் எப்போது வேண்டுமானாலும் பயிலலாம். வயதுக்கு ஏற்ற மாதிரி ஆசனங்கள் உண்டு. அதன் கால அளவும் வயதுக்கேற்ப மாறும்.

ச. க. அரங்கராஜன், மண்ணச்ச நல்லூர்.

? சிகரெட் பிடிக்கும் பழக்கமுள்ள நான் யோகாசனப் பயிற்சி செய்யலாமா?

! செய்யலாம். ஆனால் 90 சதவீதம் பேர் யோகா பழகியதும் புகைப் பழக்கத்திலிருந்து விடுபடக் கூடிய மன உறுதி பெறுவார்கள். அதுமட்டுமல்ல. அதீத உப்பு, புளி, இனிப்பு, கார வகை உணவுகளையும் விட்டு விடுவார்கள். மிதமாக உண்ணப் பழகுவார்கள். உடல் ஆரோக்கியத்துக்கு எது நல்லதோ, அதையே செய்ய மனப்பக்குவம் பெறுவார்கள்.

டி. முருகேசன், கடலூர்.

? யோகாசனம்செய்வதால்உடல்மெலிந்துவிடுமா?

! அனாவசியமாக மெலியாது. சாதாரணமாக இருக்கும். தேவையற்ற சதையைக் குறைக்கவும்; தேவையான அளவு உடல் பருமனைப் பெறவும் யோகாசனப் பயிற்சி உதவும்.

ஆத்மன், சென்னை – 5.

? பிரும்மச்சாரிகள் உட்டியானா, நௌலி போன்றவற்றைச் செய்யலாகாது என்கிறார்களே?

! யார் வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால் இதுபோன்ற கடுமையான ஆசனங்களை ஆசான் மேற்பார்வையில் செய்தல் வேண்டும் — தொடக்கத்தில்.

**தொகுப்பு: சுப்ர. பாலன்.**

மேலட்டையில்: ஜனகலட்சுமி.

வண்ணப்படம்: யோகா.

# இப்போதிருந்தே இவளுடைய பற்களுக்குப் பாதுகாப்பு அளியுங்கள்



## இவளுடைய ஃப்ளோரைட் பாதுகாப்பினை பினாகா ஃப்ளோரைட் மூலம் அளியுங்கள்




உங்கள் பற்கள் பல்லாண்டு நீடித்திருக்க, சொத்தை விழுவதிலிருந்து அவைகளைப் பாதுகாக்க வேண்டும். இதோ பினாகா ஃப்ளோரைட். அவைகளுக்கு ஃப்ளோரைட் மூலம் இன்றியமையா பாதுகாப்பளிக்கிறது. ஏனெனில், தீங்கு விளைவிக்கும் அமிலங்கள் பற்களின் பரப்பைத் தாக்கும் போது, பற்களினால் கிரகிக்கப்பட்ட ஃப்ளோரைட், பல்லின் எனாமலுக்கு சொத்தையை எதிர்க்கும் ஆற்றலைக் கொடுக்கிறது. இதன் மூலம் பற்சிதைவு ஆரம்ப கட்டத்திலேயே தடுத்து நிறுத்தப்படுகிறது. பற்சிதைவையும் சொத்தையையும் பினாகா ஃப்ளோரைட் உபயோகித்து தடுத்து நிறுத்துங்கள்.

உங்கள் பற்கள் பல்லாண்டு வாழ

**பினாகா ஃப்ளோரைட்**
டூத்பேஸ்ட்

இந்தியாவின் முதல் முதல் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் பற்பசை

ULKA-HCG-BF-10-85-TAM

# கொடுத்துச் சிவந்த கரம்

* எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம். *

? கொடுத்துச் சிவந்த கரம் கையேந்தி நிற்கிறதே?

! வரிப்பணத்தைப் பயன்படுத்தக்கூடாது. கட்சிக்கு இதற்கென வழங்கப்பட்ட நன்கொடைகளைப் பெற்று அரசு கஜானாவில் மருத்துவச் செலவைத் திருப்பித் தந்துவிட வேண்டும் என்ற எண்ணம் உயர்வானது. ஆனால் கட்டாயக் கொள்கையாக மாறி விடக்கூடாதே என்ற கவலையும் நமக்குமட்டுமல்ல முதல்வருக்கே உள்ளது. நீங்கள் குறிப்பிட்டது போலக் கொடுத்துச் சிவந்த கரம் தான் கையேந்தியிருக்கிறது என்பதை "தண்டால் நாயக்கர்கள்" நினைவில் கொண்டால் கச்சிப் பிழிய மாட்டார்கள்.

* ஆர். சிவசுப்பிரமணியன், நாகப்பட்டினம்.

? புதுயுகம், பௌர்ணமி அலைகள் — சிவகுமார் எதில் டாப்?

! குர்ர்ர்... மோட்டார் பைக்; டிஷ்யூங்... டிஷ்யூங்; டுபாட்; மாறுவேஷத் தாத்தா என்று பல 'கோட்'களை அணிந்து வக்கீல் கோட்டையும் அணிபவர் புதுயுகக்காரர். முதலில் வழிசலாக இருந்துவிட்டு இந்த வழிசலா கோர்ட்டில் இந்தப் போடு போட வைக்கிறது என்று அதிசயிக்கச் செய்தவர் பௌர்ணமி சிவகுமார். புதுயுகத்தின் பரபரப்பை விட பௌர்ணமியின் முழுமையே இதம்.

* பி. ராமகிருஷ்ணன், மேலகிருஷ்ணன் புதூர்.

? பொடி போடும் பழக்கம் உண்டா?

! பொடி வைக்கும் பழக்கம் உண்டு — எழுத்தில்.

* எஸ். பிரபா, காரைக்குடி.

? கன்னிமாரா நூல் நிலையத்தில் தங்களுக்குப் பிடித்த அம்சம் என்ன?

! சுற்றியுள்ள நிழல் தரும் மரங்கள்.

* வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி, சென்னை.

? கலைஞர் தி. மு. க. தலைமை பதவியிலிருந்து விலக வேண்டும் என்ற யோசனை குறித்து...?

! விலக வேண்டும் என்று நல்லெண்ணத்துடன் கூறுவதாகவே வைத்துக் கொண்டாலும் அதற்காகக் கூறப்படும் காரணங்களை விட பல மடங்கு அதிகமான, நியாயமான காரணங்களை விலகக் கூடாது என்பதற்காகச் சொல்லலாம். எனவே அந்த யோசனையைப் பொருட்படுத்த வேண்டியதில்லை.

* எம். செல்லையா, சாத்தூர்.

? கொத்தமங்கலம் சுப்பு, கவிஞர் சுப்பு ஆறுமுகம் — வில்லுப்பாட்டில் உங்களைக் கவர்ந்தவர் யார்?

! கொத்தமங்கலம் சுப்பு காந்தி மகான் கதையைக் கூறும் போது மெய் சிலிர்க்கும் சில சமயம்; கண்ணில் நீர்த் திரையிடும் வேறு சில சமயம். அது உள்ளம் உருகி அனுபவித்துப் பாடுகிற ரகம். காந்திய சகாப்தத்தில் வாழ்ந்தவர் அவர். சுப்பு ஆறுமுகம் வில்லுப்பாட்டில் அதிகமான ஈடுபாடு நமக்கு ஏற்படாததற்குக் காரணம், அவரது வில்லுப்பாட்டைப் பலரும் பிரசார சாதனமாகப் பயன்படுத்திக் கொள்வதாக இருக்கலாம். என்றாலும் கனிந்து பழுக்கும் போது இன்னும் உயர்நிலைகளை அவர் எட்டுவார் என்பதற்கான அறிகுறிகளைக் காண்கிறேம்.

* எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? எழுத்தாளர் சாவி பற்றி இரண்டு வார்த்தை இதமாகக் கூற முடியுமா?

! லே-அவுட் எக்ஸ்பர்ட்.

* ஜெயவசந்தன், கோவை.

? கேள்விகளை எத்தனை வகைகளாகப் பிரிக்கலாம்?

! இரண்டு வகை. பதில் வரவழைப்பவை; பதில் வரவழைக்காதவை.



* பௌர்ணமி.



* சங்கீதக் கனவுகள்



* பழுத்த பழம்



* துணிவு, தெளிவு.



• கனிய வேண்டும்



• சிவந்த கரம்.



• இரண்டு வார்த்தை



* **க. குமரேசன், திருவாரூர்.**

? **தாங்கள் அறிந்த வரையில் துணிவும் தெளிவும் உள்ளவர் என்று யாரைச் சொல்லலாம்...?**

! சே, வெட்கமாயிருக்கிறது; அதனால் ஹெக்டேயைச் சொல்லிவிடுகிறேன்!

* **பத்மினி சுரேஷ், கோவை—9.**

? **ஞாயிற்றுக்கிழமை இந்தியனாகப் பிறந்ததற்குப் பெருமைப்பட்டீர்களா?**

! அன்று மட்டுமென்ன என்றுமே இந்தியனாகப் பிறந்ததற்குப் பெருமைப்படுகிறவன் தான் என்றாலும் மார்ச் 10ல் கூடுதலாகக் கொஞ்சம் நெஞ்சை நிமிர்த்தினேன்!

* **எஸ். பார்த்தசாரதி, மங்களூர்.**

? **இளையராஜா இசையமைப்பில் சமீபத்தில் தங்களைக் கவர்ந்த பாடல் எது?**

! "சங்கீதக் கனவுகள்!" கேட்டதில்லையே என்கிறீர்களா? கேட்க முடியாது, படிக்க வேண்டும்! புத்தகமா? ஆமாம்; "கலைஞன் வெளியீடு. அது எப்படிப் பாடல் ஆகும்? அவர் உரைநடையிலேயே கவிதை நயம் இருப்பதால் பாடலென்றே கொள்ளலாம். இசை? மனத்தை இசைவிப்பதால் இந்தப் புத்தகம் இசையே! மேலும் இளையராஜா மேற்கொண்ட இசைப்பயணம் பற்றிய விவரங்கள் அடங்கிய இனிய நூல்தானே இது! மேல்நாடுகள் பலவற்றுக்கு உல்லாசப் பயணம் மேற்கொள்ளவில்லை இளையராஜா. உலக இசை மேதைகள் வாழ்ந்த இடங்களுக்குப் போய் மெய் சிலிர்த்துத் திரும்பியுள்ளார். இன்றைய இசை விற்பன்னர்களைச் சந்தித்தும் வந்திருக்கிறார். அந்தச் சிலிர்ப்பை அனுபவங்களை நம்முடன் அவர் பகிர்ந்து கொள்ளும் போது அவர் இசையை ரசிப்பதற்குச் சமமான உணர்வுகளைப் பெற முடிகிறது. மெலிதான நூல் என்றாலும் வண்ணப் படங்கள் பன்னிரண்டு ரூபாய் தரும் என்று பாடுகின்றன. "சங்கீதக்கனவுகள்" மோகன ராகத்தில், இளமைத் தாளத்துக்கு அமைந்த, இறைவனுக்கு அர்ப்பணிக்கப்படுகிற, சத்திய தரிசனப் பாடல். (கலைஞன் பதிப்பகம், சென்னை—17.)

* **ராகவன், சிதம்பரம்.**

? **எம். ஜி. ஆர். மருத்துவச் செலவுநிதிக்கு அமைச்சர்கள் ஒரு மாதச் சம்பளம் தந்திருக்கிறார்களே? தாராள மனசைப் பாராட்டுவீர்களா?**

! நிச்சயமாக. அதேசமயத்தில் தத்தம் சம்பளங்களைத் தாங்களே உயர்த்திக் கொள்ளாமலிருந்திருந்தால் இன்னும் அதிகமாகவே பாராட்டலாம். இந்தச் சம்பள உயர்வைச் சில காலத்துக்காவது ஒத்திப் போட்டிருந்தால் இத்தனை விரசமாகத் தெரியாது.

* **சி. ராமகோபால், சென்னை—33.**

? **போன வாரம் உங்கள் பதில் அர்த்தமற்றது என்பதை ஒப்புக் கொள்ளும்! ப.உ.ச.வுக்கு மந்திரி பதவி கிடைத்துவிட்டதே கவனித்தீரா?**

! கவனித்தேன். முதல் பட்டியலில் இல்லை, இரண்டாம் பட்டியலில் இல்லை, மூன்றாம் பட்டியலில் ஏதோ போனால் போகட்டும் என்றோ, அல்லது தொந்தரவைச் சகிக்க முடியாததாலோ கொடுத்தது போல் கொடுக்கப்பட்டிருப்பதைக் கவனித்தேன். அவர் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டிருக்கும் போதே அவருக்குப் பதில் அவர் இலாகா பற்றிய கேள்விக்கு வேறு ஓர் அமைச்சர் சட்டசபையில் பதில் கூறிக் கொண்டிருந்ததையும் கவனித்தேன். அன்று அவர் சட்டசபைக்கே வரவில்லை என்பதையும் கவனித்தேன்... எப்படியோ பஞ்சாயத்துத் தேர்தல்களை அவர் நடத்திக் காட்டினால் சரி!

* **ரூ. 10 பரிசு பெறுபவர்:**
**எஸ். எஸ். மணி,**
**சபாபதி கோவில் தெரு,**
**சாலை, திருவனந்தபுரம்.**

## நீங்கள்கேட்டவை — தராசு

# கையேந்தி நிற்கிறதே?

# "மூடு விழாவுக்கு வருகிறேன்!"

அந்தத் தொழுநோய் நிவாரண நிலையத்தில் கட்டி முடிக்கப்பட்ட ஒரு கட்டிடத்தைத் திறந்து வைக்க வரும்படி மகாத்மா காந்தியை அழைத்தார் நிலையச் செயலாளர் பேராசிரியர் ஜெகதீசன்: அதற்கு காந்திஜி, "சுகாதார மந்திரியான ராஜ்குமாரி அமிர்த் கௌரைக் கொண்டு திறப்பு விழாவை நடத்துங்கள்" என்றார். "இல்லை, நீங்கள்தான் வந்து திறப்பு விழாவைச் சிறப்பிக்க வேண்டும்" என மீண்டும் வற்புறுத்திய போது, காந்திஜியின் ரத்தினச் சுருக்கமான பதில்: "(தொழுநோய் நிவாரண) நிலையத்தின் மூடு விழாவுக்கு நான் வருகிறேன்..." அப்பப்பா! எத்தனை அர்த்தம் பொதிந்த பதில்!

"அன்று காந்திஜி சொன்னது, இன்று உண்மையாகிக் கொண்டு வருகிறது என்பது ரொம்பவும் மகிழ்ச்சியான செய்தி. ஆமாம்! இந்த மலுவந்தாங்கல் கிராமத்தில் (தென்னார்காடு மாவட்டம், கண்டாச்சிபுரம் பக்கத்தில், சப்தமில்லாமல் தொழுநோய் நிவாரண நிலையம் இயங்கி வருகிறது) நிவாரண நிலையம் ஆரம்பித்த புதிதில், 1000 பேருக்கு 48 பேர் தொழுநோயாளிகள். இன்று சுமார் 40 வருடங்களுக்குப் பிறகு, இந்த விகிதம் 1000 பேருக்கு 3 பேராகக் குறைந்துள்ளது. புது நோயாளிகள் விகிதம், மூக்கில் விரல் வைக்குமளவுக்குக் குறைந்துவிட்டது. எஸ்... 2000-க்கு ஒருவர்!" என்று மனத்தில் சந்தோஷம் பொங்கச் சொல்கிறார், பேராசிரியர் ஜெகதீசன்.

இதுமாதிரி, தொழுநோயாளிகளின் எண்ணிக்கையைக் குறைப்பதில், இந்நிலையம் ஆற்றி வரும் இடைவிடாத சேவையின் பலனே, இப்படிப்பட்ட விகிதாசார வீழ்ச்சி! "காந்திஜி சொன்ன மாதிரி, தொழுநோய் நிவாரண நிலையத்துக்கு இன்னும் ஐந்து அல்லது பத்தாண்டுகளில் மூடுவிழா நடத்திவிடலாம்! ஆனால் அதில் கலந்து கொள்ளத்தான் காந்திஜி நம்மிடையில் இல்லை" என்கிறார் மகிழ்ச்சியினிடையே வருத்தம் பேசிடுகிற குரலில் ஜெகதீசன்.

ஆனால், இவர், தமது சேவையை விட்டு விடுவதாய் இல்லை. தொழுநோயாளிகள் எண்ணிக்கையைக் குறைந்து விட்டதால், இந்த நிலையத்தை, பல்வேறு வகையான சிறப்புப் பிரிவுகளும் அமையப் பெற்ற, ஒரு பொது மருத்துவ நிலையமாய் கொஞ்சம், கொஞ்சமாய் மாற்றி அமைத்துக் கொண்டே வருகிறார்.

இத்திட்டத்தின்படி, சமீபத்தில் கட்டி முடிக்கப்பட்ட, கண் மற்றும் பல் மருத்துவ பிணக்குகளைத் திறந்து வைக்க, நம் துணை ஜனாதிபதி ஆர்.வி. வந்திருந்தார்.



• நூற்புப் பணி. நிலையவாசிகள் மட்டுமின்றி கிராமத்திலிருந்து வரும் ஆரோக்கியமான பெண்மணிகளும் இணைந்து பணிபுரிகிறார்கள்.

• இடமிருந்து வலமாக: ஜெகதீசன், ஆர்.வி., கே.ஏ.கே.







பேராசிரியர் ஜெகதீசன்.



நூற்பும் நெசவும்.

ஆர். வி.யும், ஜெகதீசனும், கல்லூரியில் ஒன்றாகப் படித்தவர்கள். விழாவில் பேசும் போது, ஆர். வெங்கட்ராமன், "ஜெகதீசன் தொழுநோயாளிகளின் நல்வாழ்வுக்கென்றே தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். பொதுவாக, சமூக சேவை செய்பவர்கள், தம் சேவை மூலமாகப் பதவி பெறுவதில் குறியாய் இருப்பார்கள்; அல்லது, பொதுச் சேவை குறித்து, தலைவர்களிடம் பேசிவிட்டு, விடைபெறும்போது, சில சுய நலக் காரியங்களையும் சாதித்துக் கொண்டு போவார்கள். ஆனால் அப்படி இல்லாத — ஒரே மனிதர் ஜெகதீசன். எத்தனை மணி நேரம், யாரிடம் பேசிக் கொண்டிருந்தாலும், தொழுநோயால் பாதிக்கப்பட்டவர்களின் பிரச்சினை, அவர்கள் மறுவாழ்வு இவை பற்றித்தான் பேசிக் கொண்டிருப்பார்" என்றார்.

ஜெகதீசன் ஒருதடவை காமராஜைப் பார்க்கப் போனபோது, சிறிது காத்திருக்கும்படி நேர, இதை அறிந்த காமராஜ் "அட! அவரைப் போய்க் காத்திருக்க வைச்சிட்டீங்களே! அவரைக் காத்திருக்கச் சொல்றது நல்ல காரியங்களைத் தள்ளிப் போடறாப் போல" என்று சொல்லிவிட்டு, உடனே வரச் சொல்லிப் பேசினாராம். இந்த நிகழ்ச்சியையும் பெருமையுடன் நினைவுகூர்ந்தார் ஆர். வி.

நிலையத்தைச் சுற்றிப் பார்த்தோம். பெரிய நிலப்பரப்பு. நிறைய கட்டிடங்கள். உலகின் பல நாட்டு சேவை நிறுவனங்களிலிருந்தும், நன்கொடைகள் பெற்றுக் கட்டப்பட்டவை. புதிதாய்த் திறக்கப்பட்டுள்ள கண் சிகிச்சைக் கட்டிடம், கனடா நாட்டின் 'ஆபரேஷன் ஐ சைட் யூனிவர்ஸல்' நிறுவன நன்கொடை. பல் மருத்துவக் கட்டிடம், டானிடா நிறுவன நன்கொடை.

அன்னை கஸ்தூரிபா மறைந்த உடன், அவர் நினைவாய் ஒரு அறக்கட்டளை ஏற்படுத்தப்பட்டது. அதன் பணிகளுள் ஒன்று தொழுநோய் நிவாரணம். மகாத்மா ஜிக்கு இது மிகவும் விருப்பமான பணி. இந்தியாவில் தொழுநோயாளிகள் மிக அதிகமான மாநிலங்களில் ஒன்று தமிழ்நாடு. இங்கே, தொழுநோயாளிகள் அதிகமான பகுதி வட ஆர்காடு, தென்னார்காடு, செங்கல்பட்டு. இந்த மூன்றுக்கும் பொதுவான பகுதியில் —மதுவந்தாங்கலில் — இந்நிலையம் அமைந்ததுதானே சரி? இது 44 வருடங்களுக்கு முந்தைய கதை. அப்போது இது காட்டுப் பகுதி. நடுவிலே பிரிட்டிஷ் காட்டிலாக்கா அதிகாரிகளுக்காக ஒரு பங்களா இருக்கும். அந்தப் பங்களாவில்தான் ஆஸ்பத்திரி. நோயாளிகள் வந்து, சிகிச்சை பெறுவார்கள். மக்களிடையே இதற்கு 'பங்களா ஆஸ்பத்திரி' என்று பெயர்.

நிலையத்தின் கணக்கு வழக்குகளைக் கவனித்துக் கொள்பவரை அறிமுகப்படுத்தினார்கள். அவர் சொன்னார்: "ஆரம்ப நாட்களில் நாங்கள் ஒரு இரட்டை மாட்டு வண்டி கட்டிக் கொண்டு, ஊர் ஊராய்ப் போய், மக்களைச் சோதித்து, சிகிச்சையளித்து வந்தோம். கொஞ்ச நாட்களுக்குப் பிறகு,



ஆண், பெண்களான வாலிப வயதினர் நிலையத்தில் தையல் கற்று பயின்று தத்தம் கிராமங்களில் தையல் கடை வைக்கின்றனர்.

# சென்றோம்; பார்த்தோம்; சொல்கிறோம்

ளருக்கு ஒருவராய்த் தேர்ந்தெடுத்து, அவரிடம் மருந்துகளைத் தந்து, மற்ற நோயாளிகள், அவரிடம் மருந்துகளைப் பெற்றுக் கொள்ள வழிசெய்தோம். இதற்கு பொதுச் சேவையில் ஈடுபாடு உள்ளவர்கள், கொஞ்சம் படித்த நோயாளிகள் இவர்களைத் தேர்ந்தெடுத்தோம். பின் பாரா மெடிகல் பணியாளர்களுக்கு நன்கு பயிற்சியளித்து, அவர்கள் கிராமங்களிலேயே தங்கி, சிகிச்சையளிக்க ஏற்பாடு செய்தோம். இப்போது சுமார் 10 பாரா மெடிகல் பணியாளர்களின் கண்காணிப்பின் கீழ் சுமார் 150 கிராமங்கள் உள்ளன." இப்படிச் சொல்கிற இவரும் ஒரு முந்நாள் தொழுநோயாளி. போஸ்ட்மாஸ்டராய் பணியாற்றியபோது, தொழு நோய்க்கு ஆளாகி, அல்லல்பட்டு, இங்கே வந்து, சிகிச்சை பெற்று, பூரண குணமடைந்து, இங்கேயே பணிபுரிகிறார்.

தொழுநோயால் பாதிக்கப்பட்டு, வீட்டிலிருக்கும் சொந்தக்காரர்களாலேயே வெறுத்து, ஒதுக்கப்பட்டவர்களுக்காக தனி பிளாக். இவர்களுக்குத் தாம் உபயோகமற்றவர்கள், ஒதுக்கப்பட்டவர்கள் என்கிற காம்ப்ளெக்ஸ் வந்துவிடக் கூடாது என்று நெசவு, நூற்பு, தையல் போன்ற வேலைகள் தரப்படுகின்றன. நிலையத்தின் ஒரு பகுதியில் இருக்கிற நிலத்தில் விவசாயமும் நடைபெறுகிறது. தவிர, நோயாளிகள் அல்லாதவர்களுக்கும் தையல் போன்ற பயிற்சிகளுக்கு வழி செய்யப்பட்டுள்ளது.



"வேலை மிகுதியாக இருக்கவே, "யாராவது வந்தால் நான் வெளியே போயிருக்கிறேன் என்று சொல்," என்றார் சர்ச்சில் தம் உதவியாளரிடம்.

"நான் சொன்னால் அவர்கள் நம்ப வேண்டுமே?" என்றார் உதவியாளர்.

"கதவைத் திறக்கும்போது நான் வழக்கமாகப் புகைக்கும் இந்தச் சுருட்டைப் புகைத்துக் கொண்டே திற" என்றார் சர்ச்சில்.

உலக அறிவுகள் ஆயிரம்.

தகவல்: மதுரை. எம். கண்ணன்.

என்ன தெரியவில்லையா!
சரி-போகட்டும்!
இன்னும் கொஞ்சம் வளர்ந்தபின்
எடுத்த போட்டோ இதோ!
இப்போது சொல்லுங்கள்
யார் இது என்று?

விடை: 63-பக்கம்.



பல வருஷங்களுக்கு முன்னால் கைவிரல்கள், பாதிக்கப்பட்ட தொழுநோயாளிகளுக்கு அறுவைச் சிகிச்சை செய்கிற வசதி, மருத்துவமனைகளில் இல்லாததால், வேலூர் ஸி. எம். ஸி. மருத்துவமனைக்குப் போக வேண்டிய சூழ்நிலையில், வேலூர் மருத்துவமனை காம்பௌண்டே தொழுநோயாளிகளால் நிரம்பி வழிந்து, வேறு பல சிகிச்சைக்கு வந்த நோயாளிகளுக்குப் பெருந்தொந்தரவு அளிக்க, மருத்துவமனைக்குப் பக்கத்திலேயே ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்து நோயாளிகள் தங்க ஏற்பாடு செய்து, சிகிச்சையளித்த நிகழ்ச்சியைக் கேட்கும் போது, இந்த சேவை மனப்பான்மைக்கு 'சல்யூட்' அடிக்கத் தோன்றுகிறது.

ஜெகதீசன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், ஆங்கிலப் பேராசிரியராய் பணியாற்றியவர். மகாத்மாஜி, தக்கர் பாபா, சீனிவாச சாஸ்திரி ஆகியோருடன் நெருங்கிப் பழகியவர். அவரது சேவை மனப்பான்மை ஒருபுறமிருக்க, அவர் இப்பணியில் ஈடுபட்டுள்ளதற்கு இன்னொரு காரணம், இந்த நோயை எப்படியும் முற்றிலுமாய் ஒழித்துக் கட்டிவிடுவது என்கிற ஒரு வித வெறி. இதற்குக் காரணம்? ஜெகதீசனே இந்த நோயினால் தாக்கப்பட்டு, மீண்டவர்; நோயின் கொடுமைகளை உணர்ந்தவர் என்பதுதான்!

எஸ். சந்திரமௌலி.



23

° வியன்னு பல்கலைக்கழகம்

ஆஸ்திரியாவின் தலைநகராகிய வியன்னு வில் விமான நிலையமே ஓர் இதழை நடத்து கிறது. 'வியன்னு உங்களை வரவேற்கிறது.' — என்பது பத்திரிகையின் பெயர். வியன்னு ஏர்ப்போர்ட் ஜர்னல் என்று சுருக்கமாகவும் சொல்கிறார்கள். அழகிய ஆர்ட் பேப்பரில் இனப் பத்திரிகை! அளவில் 8 பக்கம். பல வண்ணப் படங்களுடனும், சுற்றுலாப் பயணிகளுக்குத் தேவையான விவரங்களுட னும் அச்சிடப்பட்ட இவ்விதழ் ஒவ்வொரு பயணியிடமும் கொண்டு வந்து தரப் படு கிறது.

இந்த விமான நிலையப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டே நிலையத்தின் அடித் தளத்திலிருந்த பாதாள ரயிலுக்காகக் காத் திருந்தேன். அன்று ஒரு சனிக் கிழமை. வார இறுதி நாள். ஆளரவமற்றிருந்த இரயில் நிலையம் திகிலூட்டியது. டிக்கட் கவுண்ட் டரில் தனியாக ஒரு பெண்மணி அமர்ந் திருந்தாள். இருபத்து நாலு ஷில்லிங் கொடுத்து வியன்னு நகர் மையத்துக்கு ஒரு டிக்கெட் எடுத்தேன். இரயில் வந்தது. முதல் பயணியாக நான்தான் ஏறினேன். முழு இரயிலிலும் நான் ஒரே ஆள்தான். பத்து நிமிஷத்தில் அது புறப்படுவதற்குள் இன்னும் இரண்டொருவர் வந்து ஏறினர் கள். யாருக்கும் ஆங்கிலம் தெரியவில்லை. ஜெர்மன் மட்டுமே தெரிந்திருந்தது. இரயில் புறப்பட்டு அடுத்த இரண்டொரு நிலையங் களில் நின்று விட்டுக் கிளம்பிய போது புதிதாகச் சிலர் ஏறினர்கள். அப்படி ஒரு நிலையத்தில் கையில் ஆங்கில நாவலுடன் ஏறி அமர்ந்து படிக்கத் தொடங்கிய ஒரு யுவதியை அணுகி, "டு யூ ஸ்பீக் இங்கி லிஷ்?" — என்ற மாமூலான கேள்வியைக் கேட்டதும், அவள் 'எஸ்' என்று புன்முறு வல் பூத்தாள்.

எனது டைரியை எடுத்து இம்முறை ஹோட்டலின் பெயரைச் சரியாகப் பார்த்து அவளிடம் விசாரித்து அறிய முயன்றேன். நான் கூறிய ஓட்டல் நகர மையத்திலிருந்து அதிக தூரம் இருப்பதாக அவள் கூறினுள். அந்த அகாலத்தில் டாக்ஸியில் அங்கு போகவே அதிகச் செலவாகும் என்றும் சொன்னுள். எனக்கு ஆட்சேபனையில் லாத பட்சத்தில் நகர மையத்தில் தன்னை தனக்குத் தெரிந்த ஓர் ஓட்டலில் தங்க ஏற் பாடு செய்து தருவதாகவும் அவளே உறுதி கூறினுள்.

"வேறு ஓட்டலில் ஏற்கனவே செய்த ரிஸர்வேஷன் என்ன ஆவது? என்று கேட் டேன். புதிதாகத் தங்கப் போகும் ஓட்டலி லிருந்தே ஃபோன் செய்து அந்த ரிஸர் வேஷனைக் 'கான்ஸல்' செய்து விடலாம் என்றுள். தயக்கத்தோடும் சிறிது சந்தேகத் தோடும் சிந்தித்தேன். இப்படிக் கனிவாக வும், அன்பாகவும் பழகும் பெண்களைப்

# ஐரோப்பாவின் திருவையாறு

—நா. பார்த்தசாரதி

பற்றி ஹாம்பர்க்கில் கேட்டிருந்த பயமுறுத்தலும் எச்சரிக்கையும் நினைவு வந்து மிரட்டின.

நள்ளிரவில் இரயிலிலிருந்து இறங்கி ஆளரவமற்ற வியன்னா வீதிகளில் தனியே ஓர் இளம் பெண்ணுடன் நடந்து போய்க் கொண்டிருந்தேன். சந்து பொந்துகள், குறுகலான தெருத்திருப்பங்களில் மாற்றி மாற்றி அவள் அழைத்துச் சென்ற போது மர்மக் கதைகள், ஜேம்ஸ்பாண்ட் பாணி திரைப்படக் காட்சிகள் நினைவு வர நெஞ்சு படக் படக் என்று வேகமாக அடித்துக் கொண்டது. நல்லவேளையாக, அப்படி எதுவும் நடக்கவில்லை. உள்ளடங்கிய தெரு ஒன்றிலிருந்த **'Hotel Josefstadt'** ல் கொண்டு போய்ச் சேர்த்து, "இவர் என் நண்பர்! நம் நாட்டையும், வியன்னாவையும் சுற்றிப் பார்க்க வந்திருக்கிறார். குறைந்த பட்ச வாடகைக்கு ஓர் அறை தந்து உதவுங்கள். அதோடு இவர் ஏற்கனவே அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் மூலம் புக் செய்திருக்கும் 'நாய் பல்' ஹோட்டலில் யூபர்ஜலுக்கு ஃபோன் செய்து அந்த ரிஸர்வேஷனை ரத்துச் செய்யுங்கள்." என்று அறிமுகப்படுத்திவிட்டுக் 'குட் பை' சொல்லி விடை பெற்றாள் அந்த ரயில் சிநேகிதி.

ஆஸ்திரியத் தலைநகர் வியன்னா சங்கீத கர்த்தாக்கள், சாஹித்ய மேதைகள், வாத்திய இசை வல்லுநர்கள் நிறைந்த கலை நகரம். நான் போயிருந்த சமயம் 'மியூஸிக் ஸம்மர் இன் வியன்னா' (வியன்னாவின் சங்கீத வசந்தம்) என்று தடபுடல் பட்டுக் கொண்டிருந்தது. ஸால்ஸ்பர்க் இசை விழாக் கச்சேரிகள் பற்றிய அறிவிப்புகள் பிரமாதப் பட்டுக் கொண்டிருந்தன. நம்மூர்த் திருவையாறு தியாகப் பிரம்ம உற்சவம் போல் ஸால்ஸ் பர்க் இசைவிழா கருதப் படுகிறது.

ஊரைச் சுற்றிக் காண்பிக்கும் 'சிடி ரமா' டூரிஸ்ட் கோச்காரர்கள் இசை விற்பன்னர்களின் இடங்கள், நினைவுச் சின்னங்கள், இசையரங்குகள், ஆர்கெஸ்ட்ரா நிகழிடங்கள் ஆகியவற்றை மட்டுமே தனியாகச் சுற்றிக் காண்பிக்கிற ஒரு டூருக்கு 'ஸவுண்ட் ஆஃப் மியூஸிக் டூர்' — என்று பெயர் சூட்டியிருந்தார்கள்.

18—வது நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பாவின் புகழ் பெற்ற மியூஸிக் 'கம்போஸர்கள் ஒன்று கூடி, சந்திக்கும் சங்கீத ஸ்தலமாக வியன்னா இருந்தது. ஸிம்ஃபனி ஆர்கெஸ்ட்ரா சம்பந்தப்பட்ட மகத்தான இசை அறிஞர்கள் எல்லாம் வியன்னாவில் இருந்திருக்கிறார்கள். ஜோஸப் ஹேடன், லூட்விக் வான் பீதோவன், மூஸாட், பிரான்க் ஷூபெர்ட், ஆண்டன் ப்ரக்னர், அர்னால்ட் ஷோன்பெர்க், அல்பென்பெர்க், குஸ்டாவ் மாலர், போன்றவர்கள் புகழ் பெற்றவர்கள்.

மூஸாட்டின் 'பாஸ்டோரல் ஸிம்பனியை' யும், பீதோவனின் 'ஹெய்லிகென்ஸ்டாட் டெஸ்டாமெண்ட்' டையும் எவரும் என்றுமே மறக்க முடியாது. பீதோவன் தன்னுடைய ஸிம்பனிகளை இருந்து இயற்றிய இல்லத்தை இன்றும் வியன்னாவில் காணலாம். கார்ல்போம், கோட்ப்ரைட் வான் ஸ்ய்னெம், போன்ற இன்றைய இசைவல்லுநர்களையும் வியன்னா பெற்றிருக்கிறது.

வியன்னா வீதிகள் — பிரதானமான சிலவற்றைத் தவிர — பெரும்பாலும் குறுகலாகவும், சந்து பொந்துகளாகவும் இருப்பதால் ஏறக்குறைய ஒரு ரயில் பெட்டியின் நீளமுள்ள சொகுசு பஸ்கள் நுழையச் சிரமப் பட வேண்டும். இதனால் நகரின் பல் வேறு டூரிஸ்ட் கம்பெனிகளும் தங்கள் சொகுசு பஸ்களை ஒரு மையமான பூங்கா அருகே உள்ள மைதானத்தில் நிறுத்திவிட்டு 'பிக் அப் வேன்' — என்ற சிறு சிறு வேன்கள் மூலம் எல்லா ஓட்டல்களுக்கும் வந்து வாடிக்கையாளர்களை ஏற்றிக் கொண்டு மைதானத்தில் கொண்டு போய்ச் சேர்க்கிறார்கள். அதி காலையில் இந்தப் 'பிக் அப் வேன்' கள் வண்டுகளாகப் பறக்கின்றன.



• வியன்னாவில் ஒரு சர்ச்.



• ஓட்டோ வாக்னர் கட்டிய அற்புத மாளிகை.

ஹோட்டல் ஜோஸப் ஸ்டாட் வாசலில் காலை எட்டரை மணிக்கு வந்த முதல் வேனில் நான் ஏறி விட்டேன். பாதித்தூரம் போய் அவர்கள் என் டிக்கெட்டைப் பார்த்த பின்புதான் அது தங்கள் கம்பெனி டூருக்கான டிக்கெட் இல்லை என்று கண்டுபிடித்தார்கள். ஆனால் அதற்குள் நான் டிக்கெட் வாங்கியிருந்த கம்பெனியின் வேன் பின்னாலேயே துரத்திக் கொண்டு வந்து வழிமறித்து என்னை ஏற்றிக் கொண்டு, முந்தைய வேன்காரரைச் செல்லமாகக் கடிந்து கொண்டு புறப்பட்டது.

மைதானத்தில் மூன்று பெரிய டூரிஸ்ட் பஸ்கள் புறப்படத் தயாராயிருந்தன. எந்த எந்த பஸ்ஸில் எந்தெந்த மொழியில் வர்ணனை விளக்கம் தரப்படும் என்ற போர்டும் இருந்தது. நான் ஆங்கில பஸ்ஸில் ஏறினேன். அன்று ஞாயிற்றுக் கிழமையாதலால் நல்ல கூட்டம். மூன்று பஸ்களும் நிரம்பியிருந்தன. கட்டிடக்கலை அழகில் வியன்னா உலகப் புகழ் பெற்றது. ஒவ்வோர் அரண்மனையும், மாதா கோவிலும், தியேட்டரும், நினைவில் பதியக் கூடிய அழகுடன் இருந்தன. நுணுக்கமான வேலைப்பாடுகள் நிரம்பியிருந்தன. லண்டன் பக்கிங்ஹாம் அரண்மனையை விட பெரிய அரண்மனைகள் வியன்னாவில் அதிகம் புகழ் பெறாமல் விளம்பரமாகாமல் விளங்கின. செயிண்ட் ஸ்டீபன்ஸ் கதீட்ரல், குறுகிய தெருக்கள் நிறைந்த பழைய வியன்னா, பல்கலைக் கழகம், பாராளுமன்றம், இசை மேதை மூஸாட் மெமோரியல் ரூம்ஸ், ஷோன்பர்ன் அரண்மனை, பெல்வேடியர் அரண்மனைத் தோட்டம், பாராளுமன்றக் கட்டிடம், என்று ஒவ்வொன்றாகப் பார்த்தோம்.

'ஓட்டோவாக்னர்' — என்ற அற்புதமான கட்டிடக் கலைஞர் வரை படம் எழுதிக் கொடுத்து உருவாக்கிய ஆறடுக்கு மாளிகை வியக்கத்தக்கதாயிருந்தது. இக் கட்டிடத்தில் மெல்லிய தங்கத்தகடுகள் பதிக்கப்பட்டுள்ள அலங்கார வேலைப் பாட்டைப் புதுப்பிப்பதற்கே இரண்டு லட்சம் ஆஸ்டிரிய ஷில்லிங் செலவழிக்கப் பட்டதாகக் கூறினார்கள்.

பெல்வேடியர் அரண்மனையைச் சுற்றிக் காட்டும் போது ஏராளமான டூரிஸ்ட் பஸ்கள் வந்து குவிந்திருந்தாலும் ஞாயிற்றுக் கிழமை கூட்டத்தைச் சமாளிக்க முடியாததாலும், ஐம்பது ஐம்பது பேராகப் பிரித்து உள்ளே அழைத்துச் சென்றார்கள். பார்த்து முடிக்கவே சில மணி நேரங்கள் ஆயிற்று. ஆம்! உண்மையிலேயே லண்டனிலுள்ள பக்கிங்ஹாம் அரண்மனையை விடப் பல மடங்கு பெரியதுதான். பெல்வேடியர் தோட்டம் வியக்கத்தக்க அளவு அழகாகவும் விசாலமானதாகவும் இருந்தது.

எங்கள் சுற்றுலா எல்லாம் முடிந்து வியன்னா டவுன் சென்டர் அருகே மாபெரும் பூங்காவிற்குப் பக்கத்தில் கொண்டு வந்து இறக்கிவிட்டார்கள். மறுபடி விமான நிலையத்திற்குப் போக வியன்னா ஹில்டன் ஹோட்டல் அருகே இருந்து பஸ்கள் புறப்படுவதாக அறிந்து நிறைய நேரம் இருந்ததால் நடந்தே பல இடங்களைப் பார்த்துக் கொண்டு அங்கு சென்றேன். ஒவ்வொரு பூங்காவும் ஓர் அழகு. ஒவ்வோர் கட்டிடமும் ஓர் அழகு. ஆஸ்திரியக் கட்டிடக் கலை நுணுக்கங்கள் மனத்தில் பதிந்து விடுகின்றன. யுனெஸ்கோ அலுவலகப் பகுதிகள் உள்ள தற்கால பன்மாடிக் கட்டிடங்கள் ஆஸ்திரியாவின் பழைய கட்டிடங்களோடு ஒப்பிடும் போது திருஷ்டி பரிகாரமாகவே காணப்படுகின்றன.

விமானத்துக்கு நிறைய நேரம் மீதமிருந்ததால் நான் மெட்ரோவிலேயே புறப்பட்டுச் சென்றேன். அப்படியும் உரிய நேரத்திற்கு முன்னதாகவே போய்ச் சேர்ந்திருந்தேன். வியன்னா விமான நிலைய லுப்தான்ஸா புக்கிங் கவுண்டரை நெருங்கி என் டிக்கெட்டை நீட்டினேன். ஃப்ராங்க்பர்ட் போவதற்காகத்தான். அந்தக் கவுண்டரிலிருந்த பெண்மணி என் பெயரைப் படித்து விட்டு நிமிர்ந்து பார்த்துப் புன் முறுவலுடனே, "ஆர் யூ மிஸ்டர் பார்த்தசாரதி? தேர் இஸ் எ டெலக்ஸ் ஃபார் யூ" — என்றாள். தனது மேஜையிலிருந்து பல்வேறு டெலக்ஸ்களிலிருந்து எனக்கு உரியதை அவள் எடுத்துத் தருகிறவரை நெஞ்சு படக் படக் என்று ஆவலில் அடித்துக் கொண்டது.

(தொடரும்)



விடை: ஹைதராபாத் ஹீரோ அசாருத்தின் தான்!
நன்றி: சொஸைட்டி. தகவல்: சௌம்யா.

நிருபர்: "ஒரு படத்துக்கு எவ்வளவு வாங்கறீங்க?"
வில்லன் நடிகர்: "கதையைப் பொறுத்து நூறு உதைக்குக் குறையாம வாங்குவேன்."
—கீழை. அ. கதிர்வேல்.



# போலீஸ் டாக்டர்



காக்கி சீருடை அணிந்த போலீஸ்காரர்களுக்கு கைத்தடியும் துப்பாக்கியும் தாம் தெரியும் என்று எண்ணி இருந்தோம். ஆனால் பேனா பிடித்து இலக்கிய வாதிகளாகவும் திகழத் தெரியும் என்பதை தமிழ் நாடு காவல்துறை அதிகாரிகள் நிரூபித்துள்ளனர். பத்திரிகைகளில் அவர்கள் எழுத்து அணிவகுப்பையும், மேடையிலே அவர்கள் பேச்சு 'புல்லட்'டாக முழங்குவதையும் பார்த்தால் காவல்துறைக்கு ஸல்யூட் அடிக்கவே தோன்றுகிறது. இந்தப் பீடு நடையில் ஆந்திரா பின்தங்கவில்லை என்று நிரூபிக்கப் புறப்பட்டிருக்கிறார் ஹைதராபாத் ஸ்பெஷல் ஐ. ஜி. ஆப் போலீஸ் திரு. நாராயணஸ்வாமி.

இவர் சமீபத்தில் டாக்டர் பட்டம் பெற்றிருக்கிறார். ஏதோ அயல்நாட்டிலிருந்து விலைக்கு வாங்கியது ஒன்று அல்ல. பாடுபட்டு உழைத்து எழுதிய "ஆந்திரப் பிரதேச காவல்துறை நிர்வாகம்" என்ற ஓர் ஆய்வுக்கு வெங்கடேஸ்வரா பல்கலைக் கழகம் வழங்கிய பட்டம் இது.

ஆய்வுக் கட்டுரை பற்றி...

ஒற்றர்களைப் பற்றி வள்ளுவரே கூறுகிறார். அர்த்த சாஸ்திரம் விளக்குகிறது. அவர்கள் தான் காவல் துறையின் முன்னோடிகள். போலீஸ் ஆக்ட் 1861–ல் பிரிட்டிஷாரால் ஏற்படுத்தப்பட்டது. அதற்குப் பிறகு உலகில் எத்தனையோ மாறுதல். ஆனால் அந்தச் சட்டங்கள் மாறவே இல்லை. அதனை காலத்திற்கு ஏற்பச் சீர்திருத்தம் செய்ய வேண்டும்.

முன்பெல்லாம் கொலை களவு கண்டு பிடிப்பது தான் போலீஸின் முக்கியப்பணி. இப்போது சினிமா பிளாக்டிக்கட் முதல் பள்ளிப் பரீட்சை கண்காணிப்பு வரை, வி. ஐ. பி. பந்தோபஸ்து முதல் வகுப்புக் கலவரம் தடுப்பு வரை — பல பொறுப்புகள். போலீஸ் படையின் எண்ணிக்கையில் ஏற்றம் இல்லை. 40 கிராமத்திற்கு ஒரு போலீஸ் படை (1 சப்–இன்ஸ்பெக்டர், 1 ஏட்டு, 9 கான்ஸ்டபிள்) நகரத்தில் 500 பேருக்கு ஒரு போலீஸ் உறுப்பினர். போலீஸ் படை வளர்ச்சி தேங்கி, ஜன எண்ணிக்கை பெருகினால், இந்த நூற்றாண்டு இறுதியில் காவல் படைக்கு அர்த்தமே இல்லாமல் போய்விடும். காவல்துறை எண்ணிக்கை பெருக வேண்டும். புது எலெக்ட்ரானிக் கருவிகள், ஊர்திகள் வாங்கப்பட வேண்டும். காரணம் திருடர்கள் நூதன முன்னேற்றக் கருவிகள் பயன்படுத்துகிறார்கள்...

இவரது ஆய்வுக்கட்டுரையின் இடையில் ஒரு ரஸமான செய்தி: மொகலாயர் காலத்தில் சொத்து திருட்டுப் போனால் போலீஸார் பொருளை அல்லது திருடனைக் கண்டுபிடித்துத் தரவேண்டும். இல்லாவிட்டால் சொத்துக்குப் பொறுப்பு ஏற்க வேண்டும்!

"பொதுவாக ஜனங்களுக்கு போலீஸ் என்றால் ஒரு கசப்பு உணர்ச்சி...?"

"காரணம் தனி மனிதன் சுதந்திரத்தில் போலீஸ் குறுக்கிட முடியும். அதனாலேயே ஜனங்கள் விரும்புவதில்லை."

"எந்த விதத்தில் போலீஸ் நடைமுறையை அபிவிருத்தி புரியலாம்...?"

"மனிதசக்தி திட்டமிடப்பட வேண்டும். பொருளாதார ரீதியில் திருப்தியாக வாழ சம்பளத்தை உயர்த்த வேண்டும். ஆட்கள் தேர்வு செய்யும் போது தகுந்த முறையில் அவர்கள் பின்னணிகள் ஆராயப்பட வேண்டும்..."

"போலீஸ் கம்ப்யூட்டர் எந்த விதத்தில் பயன் தருகிறது...?"

"ராட்சஷ உதவி. முன்பு கள்வனைக் கண்டுபிடிக்க முதலில் வீட்டை உடைக்க எந்த முறையைப் பயன்படுத்தினான் என்று ஆராய்வார்கள். இந்தக் காலத்துக்கு அது பொருந்தாது. இப்போது மாநிலத் தலைமைக் கம்ப்யூட்டர், மாவட்டக் கம்ப்யூட்டருடன் இணைக்கப்பட்டிருக்கிறது. சில வருடங்களில் வட்டம் மற்றும் போலீஸ் ஸ்டேஷனுடன் இணைப்பு ஏற்பட்டு விடும். அப்போது ஒவ்வொரு காவல் நிலையமும் நேரடித் தொடர்பு கொண்டு துப்புத் துலக்க முடியும். பன்னிரண்டு ஆண்டு குற்றவாளிகள் சம்பந்தமான 'மாஸ்டர்' செய்திக் கோவை இருக்கிறது. ஒரு கொலை நடந்தால் அதைப் பற்றிய விசேஷக் குறிப்புக்களைக் கம்ப்யூட்டருக்கு அளித்தால் அது சம்பந்தமான சமாந்திர சரித்திர கேஸ்களை அது உடன் தரும். அந்த சில கேஸ்களை ஆராய்ந்தால் 'க்ளு' கிடைக்கும். கைரேகை அகப்பட்டால் இப்போது ஆயிரக்கணக்கானவற்றை மனிதக்கண்களால் ஒப்பிட வேண்டும். கம்ப்யூட்டருக்கு விரல் தடய விவரங்கள் அளித்தால் வினாடிப் போதில் விடை தரும். இப்படி எத்தனையோ."

கம்ப்யூட்டர் காகிதம் போல நீண்ட செய்திச் சுருள் தருகிறார் நாராயணஸ்வாமி.

போலீஸ் டாக்டரின் நற்பணி நாடெங்குமுள்ள போலீஸ் இலாக்காக்களின் ஆரோக்கியம் காக்க உதவட்டும்.

—சுபஸ்ரீ

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# நட்சத்திரம்
# அணியும் நட்சத்திரம்











அமிதாப். பாம்பே டையிங்—சினி
ப்ளிட்ஸ் ஸ்டார் போட்டியில்
முதலிடம் பெற்ற நட்சத்திரம்.

பாம்பே டையிங் துணிகள். ஆண்களுக்கான
அணிகளிலே நட்சத்திரம். நயநாகரிக ஷர்ட்டிங்.
நேர்த்தியான ஸூட்டிங். பாம்பே டையிங்
அணிந்திடுங்கள்—போகுமிடமெல்லாம்
முதலிடமே உங்களுக்கு.

BDM-1570

**பாம்பே டையிங்**



ஸூட்டிங் • ஷர்ட்டிங்